கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

ஒரு தமிழ்ப்பத்திரிகை.



"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு

மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.


தொகுதி கக.] துர்மதி-ஹு வைகாசி-மீ பகுதி எ.

VOL. XIX. May—June—1921. No. 7.


## உள்ளுறை.




பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

வருஷசந்தா ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா-8.

வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி கக.] துர்மதி-ஞு வைகாசி-மீ [பகுதி எ.

VOl. XIX. May—June—1921. No. 7.

## தொல்காப்பியர் சைனராம். II

சென்ற மாசிமாதத்துச்செந்தமிழிலே ஸ்ரீமத் வையாபுரிப்பிள்ளையவர்கள் உயிர்களை ஓரறிவுயிர்முதலாகப் பகுத்துக்கொள்ளுதல் சைனமதவழக்கம் எனவும், தொல்காப்பியனாரும் அவற்றை அங்ஙனம் பகுத்துக்கூறுதலிற் சைனராவர் எனவும் மிகப்பெருக்கி எழுதினார்கள். அவர்கள் எழுதியவிஷயத்திலே பலப்பல ஐயங்கள் தோன்றப்பெறுதலின் அவற்றை யெல்லாம் ஈண்டெடுத்து எழுதுதலும் எமது கடமையாயிற்று.

(1) தொல்காப்பியனார் ஓரறிவுயிர்முதல் ஆறறிவுயிர் இறுதியாக வன்றே உயிர்களைப் பகுத்திருக்கின்றனர்?

(2) மெய் நா மூக்கு நாட்டம் செவி மனம் என்னும் இவற்றையன்றே அவ் வாறென்னுந்தொகை குறிக்கும்?

(3) ஓரறிவுயிர்முதல் ஐந்தறிவுயிர் இறுதியாக வுள்ளவற்றிற்கு மனவுணர்ச்சி இல்லையென்பது எளிதிற் பெறப்படுமே.

(4) "மநஷ்ஷஷ்டாநீந்திரியாணி" என்னும் கீதாவாக்கியம்போன்ற ஆர்யமதப் பிரமாணமன்றே ஈண்டுக் கொள்ளத்தக்கது?

(5) சைனமதத்தினர் உயிர்களை ஆறறிவுயிர்வரையினும் யாண்டேனும் பகுத்திருக்கின்றனரா? உதாரணங்காட்டவொண்ணுமா. பிள்ளையவர்கள் ஐந்தறிவுயிர்வரையிற்றானே உதாரணங்காட்டி யிருக்கின்றனர்? அவையும் நன்னூன் மயிலைநாதருரைப்பதிப்பின் உதவியாலே பெறப்பட்டனபோலும்.

(6) கீழ்க்காட்டும் ஸ்லோகங்களில் வரும் உயிர்ப்பகுப்பு வைதிகமுறையோ? ஜைனமுறையோ?

காமிகம்)—ஆவாபாதிலக்ஷணபடலம்—௧௪௫, ௧௪௬; ௧௪௭.)

ஏகேந்த்³ரியா த்³வீந்த்³ரியாஸ் த்ரீந்த்³ரியாஸ்ததை²வ ச ।
சதுரிந்த்³ரியா: பஞ்சேந்த்³ரியா: ஷடி³ந்த்³ரியா இதி தே க்ரமாத் ॥
வ்ருக்ஷாதி³ரேகேந்த்³ரியஸ்ஸ்யாஜ்ஜலூகாதி³ஸ்த்³வியிந்த்³ரிய: ।
பிபீலிகாதி³ஸ்த்ரீந்த்³ரியஸ்ஸ்யாத் ப்⁴ரமராதி³ரேவ ச ॥
பக்ஷிபஞ்சேந்த்³ரியோ ஜ்ஞேய: பஞ்சேந்த்³ரியா: பஶவஶ்ச ।
மானுஷ்யாதி³ ஷடி³ந்த்³ரியோ தே³வஸ்ஸர்வேஷாம் ஶ்ரேஷ்ட²: ॥

(7) ஸ்ரீமத். சாமிநாதையரவர்களும் நன்னூல் மயிலைநாத ருரைப் பதிப்பிலே ஓரறிவுயிர் முதல் ஐந்தறிவுயிர் இறுதியாக அமைத்திருத்தலை யன்றே நன்னூலார் சைனமதத்தினராவர் என்பதற்குக் காரணமாக்கி எழுதியிருக்கின்றார்கள்.

(8) "கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி" என்ற பகுதிக்குப் "புல்லு மரனு மோரறி வினவே-பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" என்ற சூத்திரத்தையும் பிறவிடங்களிலே இன்ன பிறசூத்திரங்களையும் உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியரும் மேற்கோள்களாகக் காட்டியிருக்கின்றனரே? ஆசிரியர் சைனநூலுணர்ச்சி பெரிது முடையாரன்றே.

(9) "பசும்புற்றலைகாண்பரிது" என்ற பகுதிக்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையில் "ஓரறிவுயிர்" என்று குறிப்பிட்டிருக்கின்றனரே. இத்தகைய மேற்கோள்களும் பலவுளவன்றோ?

(10) நன்னூலார் தொல்காப்பியனாரைப்போல உயிர்களை ஓரறிவுயிர்முதல் ஆறறிவுயிர் இறுதியாகப் பகுத்துக்கூறாமைக்கு மயிலைநாதரும் விருத்தியுரைகாரரும் கூறும் சமாதானங்களைச் சற்று ஊன்றி நோக்கலாகாதா?

(11) இவ்வுயிர்ப்பிரிவுகளைத் தொல்காப்பியனார் மரபியலிற் கூறியிருக்கின்றனரே. சைனமதமாயினையா அவ்வியல் எடுத்துக் கூற வந்தது? நன்னூலார் உரியியலிற் கூறியதுட்பத்தை உணரலாகாதா?

பிள்ளையவர்களும் ஏனைத் தமிழறிஞர்களும் நடுவுநிலையுடன் இவற்றையெல்லாம் ஆராய்வார்களாக.

நவநீதகிருஷ்ணபாரதி.

ஸ்ரீ:

# தொல்காப்பியர் சமயநிலை.



தொல்காப்பியர் சைனசமயத்தவராவரென்று அறிஞரொருவர் செந்தமிழ்ப்பத்திரிகையிலே தெரிவித்தனர்.

தொல்காப்பிய நூலுக்குப் பனம்பாரனர் கூறிய சிறப்புப்பாயிரத்திலே "பல்புகழ்நிறுத்தபடிமையோனே" என்பதிலுள்ள படிமையென்னுஞ் சொல் சைனமதவொழுக்கமொன்றற்கேயுரியவழக்காகலின், தொல்காப்பியர் சைனராவரென்பது அவர்கொள்கை.

அன்றியும், அவர், தொல்காப்பியனர் மரபியலின்கண்ணே ஓரறிவுயிர்முதல் ஆறறிவுயிரிறுதியான உயிர்ப்பாகுபாட்டினை எடுத்தோதுகின்றமையானும் சைனராதல்வேண்டுமென்றார். அதில் அவர் தொல்காப்பியர்கூறிய உயிர்ப்பாகுபாடு சைனமதமொன்றற்கேயுரியதென்றும் வெளியிட்டார்.

படிமையென்றசொல் சைனமதத்திற்குமட்டிலுமுரியதன்றி வைதிகவழக்காறுகவுமுள்ளதென்பது "மேவிய சிறப்பின் ஏனோர்படிமைய" என்னுஞ் சூத்திரத்தில் தொல்காப்பியர் கூறியிருத்தல்கொண்டும், பதிற்றுப்பத்து "நலம்பெறுதிருமணியில்", "கூறினைபெருமநின் படிமையானே" என வருதல்கொண்டும் முன்னரே நன்குவிளக்கப்பட்டிருத்தலின் அதனை ஈண்டு விரித்தல்வேண்டுவதின்று.

இனித் தொல்காப்பியனர்கூறிய உயிர்ப்பாகுபாடு வருமாறு:—

"ஒன்றறிவதுவேயுற்றறிவதுவே
யிரண்டறிவதுவேயதனெடுநாவே
மூன்றறிவதுவேயவற்றெடுமூக்கே
நான்கறிவதுவேயவற்றெடுகண்ணே
ஐந்தறிவதுவேயவற்றெடுசெவியே
யாறறிவதுவேயவற்றெடுமனனே
நேரிதினுணர்ந்தோர்நெறிப்படுத்தினரே".

இதிலுள்ள நேரிதினுணர்ந்தோர் என்னுந்தொடர் சைனசமயாசாரியரைக் குறிக்குமென்பதை அவர் நம நாராய்ச்சியிற் குறிப்பாற் பெற

வைத்தார். அது பொருந்தாது. அங்ஙனம் வருமிடங்களிலெல்லாம் அது முதனூலாசிரியரான அகத்தியரைக்குறித்ததென்றுதல், அன்றி யவரோடொப்ப வுயர்ந்த பிற தமிழ்ச்சான்றோரைக்குறித்ததென்றுதல் கொள்ளுதலே நேரிதாம். "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய், முற்படக்கிளந்த வெழுதிணை யென்ப" என்று பிறர்மதங்கூறலாகக்கூறிய இவ்விடத்தில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் "என்பவென்றது அகத்தியனாரை; இக்குறியீடுகளும் அகத்தியனாரிட்ட வென்றுணர்க" என்றுரைத்தார்; ஆதலின் ஈண்டும் அங்ஙனங் கோடலே ஏற்புடைத்தாகும். தொல்காப்பியர் சைனசமயாசாரியரையே கருதினவராயின் அதுதோன்றக் கூறுநிரார். அன்றி யுரையாசிரியரேனும் விளங்கவுரைத்திருப்பரென்க.

இவ்வாறே, "பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர், ஐயர் யாத்தனர் கரண மென்ப" என்றவிடத்து "ஈண்டு என்பவென்றது முதனூலாசிரியரையன்று; வடநூலோரைக் கருதியது" என நச்சினார்க்கினியர் ஐயமறுத்ததும் கண்டுகொள்க. எனவே, இவ்வகைப் பாகுபாடு அகத்திய நூலின்கண்ணும் உண்டென்பது பெறப்பட்டது; என்னை? தொல்காப்பியம் அகத்தியத்தின்வழி நூலேயென்பது யார்க்கும் ஒப்பமுடிந்ததொன்றாகலின். மற்றுத் தொல்காப்பியனார் இடையிடையே தம் மதக்கொள்கைகளையும் அகத்தியனார் உடன்படாதன சிலவற்றையும்புகுத்து நூல் செய்தாரெனின், அதுவும் பொருந்துமாறின்று. இதனை, மரபியலில் "வினையினீங்கி" என்னுஞ் சூத்திரவுரையுள் "முந்து நூலெனப்பட்டன முற்காலத்து வீழ்ந்தநூலெனக்கூறித் தோல்காப்பியர் அகத்தியத்தோடு பிறநூலும் அவற்று வழிநூல்செய்தாரென்றக்கால் இழுக்கென்னையெனின்? அது வேதவழக்கொடு மாறுகொள்வார் இக்காலத்துச்சொல்லினும் இறந்தகாலத்துப் பிறபாசண்டிகளும் மூன்றுவகைச் சங்கத்து நான்குவருணத்தொடுபட்ட சான்றோரும் அது கூறுரென்பது" எனப் பேராசிரியருரைத்தமையானறிக. தொல்காப்பியர் தமிழ்வழக்கமாகிய மாபினோடும் தமிழ்நூலோடும் மாறுபட நூல்செய்தாரல்லராகலின் அவர் கூறிய உயிர்ப்பாகுபாடும் வேதவழக்கொடுபட்ட தமிழ்ச்சான்றோர்கொள்கையென்பதே கொள்ளப்படும். படவே, அது வைதிகவழக்கி னில்லையென்றல் வலிதாயிற்று.

இனிப் பவணந்தியார் நன்னூலிற்கூறியவுயிர்ப்பாகுபாட்டினுக்கும் தொல்காப்பியர்பகுப்பிற்கும் சிறிது வேறுபாடுமுண்டு. தொல்காப்பியர்

உயிர்களை ஆறுபகுதியவாமென்றார். நன்னூலார் அவற்றை ஐந்தின்பாற் படுத்தார். தொல்காப்பியனார் ஒவ்வோருயிர்வகையின்கண்ணும் அக் கிளைப்பிறந்தன பிறவும் உளவென்றார். நன்னூலார் அது கூறிற்றிலர். இன்னும் நுண்ணுணர்வுடையோர் இங்ஙனமே இதனை விரிய ஆராய்ந்து கொள்க. தொல்காப்பியர் கூறியது வேதவழக்கொடுபட்டது. பவணந் தியார்கொள்கை சைனசமயச்சார்பாயது. தொல்காப்பியத்தின் வழிநூல் செய்தாரெனினும் சிற்சிலவிடங்களிற் பிறர்மதந் தழுவிச்செல்லுதல் நன் னூலார்க்கியல்பு. இதனைப் பிரயோகவிவேகவுரையில் "சினேந்திரன்மதம் பற்றி நன்னூலார் பலவாகக்கூறுவர்" "நன்னூலார் வாமனன் சினேந்திரன் செய்த சத்தநூல்பற்றிக் கூறுவர்" என வரும் வாக்கியங்களானறிய லாம்.

இனித் தொல்காப்பியர் சமயநிலைபற்றித் தொல்லாசிரியர் கொள்கை இன்னதென்ப துணர்த்தப்படும்.

"உயர்ந்தோர்க்குரிய வோத்தினான" என்னு மகத்திணையியற் சூத் திரவுரையில் நச்சினார்க்கினியர் 'அகத்தியமும் அதன் வழிநூலாகிய தொல்காப்பியமும் வேதத்தினாற்பிறந்தன வென்பதை நன்குபெறவைத் தார். வேதந்தோன்றியபின்னர் அதுகூறியபொருள்களையே தொல் காப்பியமும் ஆராய்கிறதென்பது ஆண்டு அவர் கருதிய பொருளாகும். "அவனறி வாற்ற வறியுமாகலின்" என்னுங் கற்பியற்சூத்திரத் தில் "தந்தையரொப்பர்மக்கள்" என்பதனுரையில் 'மக்கள் தந்தையரை யொப்பர்' என்னும் வேதவிதியோ டொற்றுமை யுடையதாகக் காட்டினர் நச்சினார்க்கினியர். இங்ஙனமே பிறுண்டும் அந்தணரருமறைப்பொருள் தொல்காப்பியத்துப் பயின்றுவருதல் அவருரையா னறியப்படும்.

"அறுவகைப்பட்டபார்ப்பனப்பக்கமும்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்திலே நச்சினார்க்கினியர் விரியவுரைப்பனவெல்லாம் தொல்காப் பியர் வைதிகசாத்திரங்களில் நன்குபயின்றவரென்பதை இனிது புலப் படுத்துவன. அவ்வுரையின்கண்ணே ஐந்திரவியாகரணம் வேதாங்கங் கள் ஆறனுள் ஒன்றென்று தெளியவுரைக்கப்பட்டது. "ஐந்திர நிறைந்த தொல்காப்பிய"னெனப் பனம்பாரனார் பாயிரங்கூறியதனையு மீண்டைக் கேற்ப நோக்கிக்கொள்க. இதனாலும் தொல்காப்பியர் வேதம் ஓதியுணர்ந் தவரென்று நன்கு துணியப்படும்.

"இன்பமுந்துன்பமும்" என்னும் களவியற்சூத்திரத்தில் "மறையோர் தேத்து மன்றலெட்டனுள்" என்பதனுரையிலே "வேதம் ஓரிடத்துக் கூறிய மணமெட்டனுள்" என் றெழுதப்பட்டுள்ளது. இங்ஙனம் ஆசிரியர் மணம் எண்வகைய என்பதை வேதம் கூறிய இடங்கண்டு அதனைச் சுட்டியுரைத்தாராதலானும் இக்கொள்கை வலியுறுகின்றது.

இனி, "வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது" என்னுஞ் சூத்திரவுரையிற் பின்வருமாறுள்ளது. அது, "கல்வி வேண்டிய யாண்டு இறவாது-துறவறத்தினைக்கூறும் வேதாந்தமுதலியகல்வி வேண்டியயாண்டைக்கடவாது; மூன்று இறவாது-அக்கல்வியெல்லாம் மூன்றுபதத்தைக் கடவாது. எ-று. இறவாதென்பதை இரண்டிடத்துங்கூட்டுக. மூன்று பதமாவன அதுவென்றும் நீயென்றும் ஆனுய் என்றுங் கூறும் பதங்களாம். அவை பரமுஞ் சீவனும் அவ்விரண்டும் ஒன்றுதலுமாதலின் இம்மூன்றுபதத்தின்கண்ணே தத்துவங்களைக்கடந்தபொருளையுணர்த்தும் ஆகமங்களெல்லாம் விரியுமாறு உணர்ந்துகொள்க. இது மூன்று வருணத்தார்க்குங் கூறினர். ஏனைய வேளாளரும் ஆகமங்களானும் அப்பொருளைக் கூறிய தமிழானும் உணர்தல் 'உயர்ந்தோர்க்குரிய' என்பதனான் உணர்க. இது இல்லறம் நிகழ்த்தினர் துறவறம்நிகழ்த்துங் கருத்தினராக வேண்டுதலின் காலவரையறை கூறுராயினர்" என்பது. இங்ஙனம் அச்சூத்திரத்திற்கு வேதவழக்கொடுபொருந்த வுரைவகுத்திருத்தலும் தொல்காப்பியர் வைதிகரேயாவர் என்னும் நச்சினார்க்கினியருடைய உண்மைக் கருத்தினை வெளியிடுகின்றது.

இவை நிற்ப. நல்லறிவுடைய தொல்பேராசிரியரும்,

"தாயிற்சிறந்தன்றுநாணுடையலாருக்கந்நாண்டகைசால்
வேயிற்சிறந்தமென்றோளிதிண்கற்பின்விழுமிதன்றிங்
கோயிற்சிறந்துசிற்றம்பலத்தாடுமெங்கூத்தப்பிரான்
வாயிற்சிறந்தமதியிற்சிறந்தமதிநுதலே"

என்னும் திருச்சிற்றம்பலக்கோவையுரையில் "'உயிரினுஞ் சிறந்தன்று நாணே, நாணினுஞ், செயிர்தீர்காட்சிக் கற்புச்சிறந்தன்று' என்றாகலின் வாயிற்சிறந்த மதியிற்சிறந்தவென்பதற்குத் தாய்போல நாண் சிறத்தலும் நாணினுங் கற்புச்சிறத்தலும் ஆகிய இரண்டும் கூத்தப்பிரான் வாயிற்சிறந்த நூல்களிடத்துச் சிறப்புடைய பொருளென்றுரைப்பினு

மமையும்" என்றுரைத்தார். இதனால் அவர் "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" என்னுந் தொல்காப்பியத்தினையே எடுத்தோதி அதனைக் கூத்தப்பிரான்வாயிற்சிறந்த நூலாகக்கொண்டு நாண்சிறத்தலும் கற்புச்சிறத்தலும் இரண்டும் அந்நூலிற்சிறந்தபொருளெனக்கூறுதற் குடன்பட்டாராதல் தேறப்படும். இது பேராசிரியர்க்குமட்டிலும் உடன்பாடன்றித் தெய்வப்புலவராகிய மாணிக்கவாசகசுவாமிகளுடைய திருவுள்ளக்கருத்துமாகுமென்பது எளிதினுய்த்துணைத்தகும். ஆகவே முற்காலத்தான்றோர் பலரும் தொல்காப்பியத்தினைத் தெய்வவோத்தாகவே கருதினாராதல் தெள்ளிது.

இதுமட்டுமன்று. தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின் கிளவியாக்கத்திலே,

"கால முலக முயிரே யுடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉ
மாயி றைந்தொடு பிறவு மன்ன
வாவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா வுயர்திணை மேன"

என்ற சூத்திரத்திற்குப் பொருளுரைப்புழிப் பேராசிரியர் "இந்நூல்செய்தான் வைதிகமுனிவனாதலின், சொல்லென்பது வேதமென்று கொள்ளப்படும்." என்பது கூறிக் கரிபோக்கினாராகலானும் தொல்காப்பியர் சைனரல்லரென்பது போதரும். "காரணத்தினமைந்த" என்னுங் கற்பியற் சூத்திரத்தில் "சொல்லுறு பொருளின் கண்ணும்" என்பதற்கு "வேதஞ்சொல்லுதலுற்றபொருளின்கண்ணும்" என இவ்வாறே பொருளுரைத்தார் நச்சினார்க்கினியரும்.

இதுகாறுங்கூறியவாற்றால் ஆசிரியர் தொல்காப்பியனார்மேற்கொண்டசமயம் பொதுவாக வைதிகமேயாகுமென்பதும் அவர் அவைதிகநெறியொழுக்கமுடையாராகாரென்பதும் நன்கு தெளிவுறுத்தப்பட்டன.

**T. N.** அப்பனையங்கார்

மதுரை,

ஸ்ரீ

# கற்புநிலை.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்"

[ஸ்ரீமகாபாரதத்தில் வியாசமுனிவராற் சொல்லப்பட்ட சாவித்திரியின்கதை சாதாரணமாய் எல்லோருக்கும் தெரிந்திருந்தபோதிலும், அதிலடங்கிய தர்மங்களின் நுட்பமான ஆராய்ச்சிகள், தற்காலம் ஆங்கில கலாசாலைகளில் ஏற்பட்டமுறைப்படி கல்விபயின்ற காந்திமதி என்ற பெண்ணுக்கும், நம்தேசத்தின் பூர்விகமுறைப்படி கல்விபயின்று வைதிக வாசனையுள்ள சத்தியவதி என்ற பெண்ணுக்கும் அடியிற் காட்டும் கற்புநிலை என்னும் சம்பாஷணரூபமாய் வெளியிடப்பட்டுள்ளன. இதில் நம்தேசத்துச் சிறுவர், சிறுமியர்கள் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டிய பல சிறந்த விஷயங்கள் எழுதப்பட்டிருப்பதுடன், நம்தேசத்துப் புராதன வழக்கவொழுக்கங்கள் தற்கால நாகரீகத்துக்கு மிகவும் ஒற்றுமையாயும் இன்றியமையாதனவாயும் இருக்கின்றனவென்றும் விளக்கப்பட்டுள்ளன.]

---

காந்திமதி:—தோழி சத்தியவதி! நீ எங்குப்புறப்பட்டாய்?

சத்தியவதி:—உன்னைப் பார்ப்பதற்காகவே வந்தேன்.

காந்திமதி:— அப்படியா; மிகவும் சந்தோஷம்; நேற்று நீ புராணங் கேட்கப் போயிருந்ததாகவன்றோ கேள்விப்பட்டேன்.

சத்தியவதி:—ஆம். அதனு லென்ன?

காந்திமதி:— அங்கே பௌராணிகர் என்னசரித்திரம் உபந்யாசம் செய்தார்?

சத்தியவதி:—சாவித்திரியின் சரித்திரம்; அது மிகவும் அழகாயிருந்தது. மெய்ம்மறந்து கேட்டுக்கொண்டிருந்தோம்.

காந்திமதி:— சாவித்திரியென்பவள் யார்? நான் கேட்டதில்லையே.

சத்தியவதி:—அந்தப் பெண்மணி பதிவிரதைகளில் மிகவும் சிறந்தவள்; கம்பீரமான மனதுடையவள். மத்திரதேசத்தரசனுக்குப் புதல்வியாய் அவதரித்தவள்.

காந்திமதி:– நாமெல்லோரும் பதிவிரதைகளில்லையோ? அவளிடம் யாது விசேஷம்?

சத்தியவதி:–கற்புநிலை யென்பது சாரீரகமென்றும் மானசிகமென்றும் இரண்டு விதம். நம்மிடமுள்ள கற்புப் பெரும்பாலும் சாரீரகந்தான். அம்மாதுசிரோமணியிடம் இரண்டும் பொருந்தியிருந்தன.

காந்திமதி:– உன் வார்த்தை பிதிராயிருக்கிறது. அதன் பொருள் எனக்கு நன்றாய்விளங்கவில்லை.

சத்தியவதி:–சாவித்திரி யௌவனப்பருவமடையுமுன்னமே அவள் தந்தை "அம்மா! உன் மனத்துக் கிசைந்த புருஷனை நீயே பார்த்து நிச்சயிக்கலாம்" என்று சொன்னார். அவளும் அப்படியே உலகெலாம் ஆராய்ந்து தேடி த்யுமத்ஸேனன் என்றஅரசன்புதல்வனும் தருமநெறிதவறாதபுண்ணியவானுமாகிய சத்தியவானே தனக்குத் தகுந்த கணவன் என்று உள்ளத்தில் எண்ணினாள்.

காந்திமதி:– சரி. அதனாலென்ன விசேஷம்?

சத்தியவதி:–பின் பொருசமயம் அவள் தந்தையிடம் மேற்கூறிய எண்ணத்தை வெளியிடும்பொழுது தேவலோகத்திலிருந்து பிரும்மபுத்திரரான நாரதர் தற்செயலாக அந்த அரசனுடைய ஸபைக்கு வந்தார். அவர்சாவித்திரியின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு, சாவித்திரியிடம், "அந்தச் சத்தியவானுக்கு ஆயுள் மிகவும் சொற்பம்," என்ற விஷயத்தை ஞானக்கண்ணால் அறிந்து பகர்ந்தார். அதைச் செவியேற்றும் அப்பெண்மணி அவனைத்தவிர வேறொருவனைக் கணவனாக வரிப்பதில்லை யென்று உறுதி கூறினாள்.

காந்திமதி:– அப்படியானால் அவளுக்குச் சித்தம் சுவாதீனமில்லை யென்று தோன்றுகிறது.

சத்தியவதி:–ஐயோ! பாவம்; இப்படிச் சொல்லுகிற உனக்குத்தான் சித்தம் சரியாயில்லை. அந்த உத்தமியின் மனவுறுதி மிகவும் புகழத்தக்கது.

காந்திமதி:- நல்லது; உலகத்தில், சரியானபுத்தியுள்ளவள் எவளேனும், தெரிந்து கொண்டே அமங்கலியாவதற்கு ஆசைப்படுவாளா?

சத்தியவதி:-தோழி; அப்படியல்ல; அச்சமயத்தில் அப்பதிவிரதை பகர்ந்த வார்த்தையைச் சொல்லுகிறேன். ஞாபகமாய்க்கேள்.

காந்திமதி:- ஜாக்ரதையாய்க் கேட்கிறேன்.

சத்தியவதி:-"ஒருவனைக் கணவனாக ஒருதரம் மனத்தால் வரித்தபிறகு அவன் நீண்டவாழ்நாளுடையவனாயினும், குறுகியவாழ் நாளுடையவனாயினும் குணமுள்ளவனாயினும் குணமில்லவனாயினும் அவனையே மணம்புரியவேண்டுமேயன்றி வேறொருவனைக் கனவிலும் நினைக்க நியாயமில்லை. உலகத்தில் எந்தவிஷயத்தையும் முதலில் மனதினால் நிச்சயித்து நாவால் வெளியிட்டுப் பிறகு அநுஷ்டானத்துக்குக் கொண்டுவருகிறார்கள்; ஆதலால் மனதுதான் எல்லாவற்றிலும் முக்கியமானது" என்று சாவித்திரி தர்மத்தின் இரகசியத்தை நட்பமாய் ஆராய்ந்துசொல்லும்பொழுது நாரதமஹரிஷியே அவளுடைய மனோதர்மத்தை மிகவும் புகழ்ந்துபேசினார்.

காந்திமதி:- இப்படிப்பட்ட மனோதர்மத்தைக் காயக்லேசஞ்செய்து ஐம்புலனடக்கிக் கடுந்தவம்புரியும் மஹரிஷிகளே புகழவேண்டும்! பிறகு என்ன நடந்தது?

சத்தியவதி:-உண்மைதான். லாகிரி வஸ்துக்களையும் மதகரமான உணவையும் புசித்து உல்லாசமாய்த்திரிகிற நமக்கு மிகவும் நட்பமான கற்புநிலையின்தன்மை எப்படிப்புலப்படும்.

காந்திமதி:- அப்படியானல் அந்தத் தர்மநெறியின் இரகசியத்தைக் கொஞ்சம் தெளிவாய் எனக்கு நீ உபதேசிக்கவேண்டும்.

சத்தியவதி:-அவ்வுத்தமியின்சரித்திரமுழுதும் கேட்டால், கற்புடைமையின்பெருமை தானாகவே விளங்கும்.

காந்திமதி:- தோழி! அவள்சரித்திரமுழுதுங்கேட்க எனக்கு ஆவல் அதிகரிக்கிறதென்று சொல்லவும் வேண்டுமோ?

சத்தியவதி:–சாவித்திரி கணவனாகவரித்த சத்தியவானுடைய தந்தை அச்சமயத்தில் வேற்றரசர்களால் முறிய அடிக்கப்பட்டு ராஜ்யமிழந்து குடும்பத்துடன்கானகஞ்சென்று ரிஷிவேஷம் பூண்டு கனி கிழங்குகளையருந்திக் கஷ்டப்பட்டுக் காலங் கழித்துக்கொண்டிருந்தார். அதை யறிந்தும் மத்திரதேசத் தரசன் தன் பெண்ணின் நிர்ப்பந்தத்துக் கிணங்கித் தானே அவரிடஞ்சென்று அவர் புதல்வரான சத்யவானுக்குத் தனது புத்திரியான சாவித்திரியை மணம்புரிந்துகொள்ளு மாறு வேண்டிக்கொண்டார்.

காந்திமதி:– சம்பந்திகளின் தற்கால நிலைமை குழந்தையான சாவித்திரிக்குத் தெரிந்திராது.

சத்தியவதி:–அதைத்தெரிந்துகொண்டே சாவித்திரி தானும் அவர்களுடன் வனவாசத்தை அனுஷ்டிக்கத் தயாராக இருந்தாள்.

காந்திமதி:– கஷ்டம்; மலர்போல் மிருதுவானசரீரமுடையவளும் பிறந்ததுமுதல் அரண்மனையில் சுகமாக, வளர்ந்தவளுமான அரசன்புதல்விக்கு இவ்வித நிச்சயமுண்டானது ஆச்சரியந்தான்.

சத்தியவதி:–சத்தியவானைப்போற் குணங்களும் சீலமும் வாய்த்தவர்கள் இவ்வுலகத்தில் வேறொருவருமில்லையென்று தெரிந்து கொண்டு நல்லபகுத்தறிவுள்ள சாவித்திரி விவேகத்துடன் அவனைக் கணவனாகஅடைவதே பரமசௌக்கியத்துக்குக் காரணமென்று தீர்மானித்தாள்.

காந்திமதி:– இதிலென்ன விவேகம்? என்ன பகுத்தறிவு? அதிபால்யம், நன்மை தீமையறியுந்திறம் உண்டாகவில்லை. ஆனது பற்றித் தன்சுகத்தைத் தானே மாய்த்துக்கொண்டாள். எனக்கு மிகவும் பரிதாபமாயிருக்கிறது.

சத்தியவதி:–பிறகு சாவித்திரி சத்தியவான் இருவருக்கும் விவாகம் மனுமுறைப்படி நடந்தது.

காந்திமதி:– தோழீ! விவாககாலத்தில் ஏதோ சில மந்திரங்கள் சொல்லுகிறார்களே. அவற்றின் பொருள் தெரியுமா?

சத்தியவதி:—ஒரு மஹாகவி விவாக மந்திரங்களின் கருத்தை ஒரு சுலோகத்தில் வருணித்திருப்பதாக என் தகப்பனர் அடிக்கடி சொல்லுவது வழக்கம்.

காந்திமதி:— அப்படியானல் அந்தச் சுலோகத்தையும் அதன் பொருளையும் தயவுசெய்து கூறவேண்டும்.

சத்தியவதி:—"[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥"

பேதையர்களுக்குக் கணவன்தான் பிரியமான நேசன். சகல பந்துவர்க்கமும் ஸர்வாபீஷ்டங்களும் சகல ஐச்வர்யமும், உயிரும் அவனேதான்; புருஷர்களும் தர்மபத்தினியை அப்படியே நினைக்கவேண்டும். இக்கருத்தை மணமகனும் மணமகளும் எப்போதும் நினைவில் வைக்கவேண்டும்.

காந்திமதி:— தோழி! சுலோகமே இனிமையானது. அதிலும் நீ சொல்லுவது மிகவும் மதுரமாயிருக்கிறது. நல்லது, மேல்நடந்த விருத்தாந்த மென்ன?

சத்தியவதி:—அப்பெண்மணி விவாகம்நடந்ததினம்முதல், சிரத்தையுடன் கணவனுக்கும், மாமி மாமன் முதலிய பெரியோர்க்கும், பணிவிடைசெய்து விரதங்களையனுஷ்டித்துத் தெய்வங்களைத் தொழுது நல்லொழுக்கந் தவருமல் நடந்து நாரதமுனிவர் குறிப்பிட்டகாலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

காந்திமதி:— ஐயோ! விதியைவெல்ல யாரால் ஆகும்? அரசன் செல்வப் புதல்வியாகிய இப்பெண்மணி மிகவும் சுகமாயிருக்க வேண்டிய இனிய இளமைப்பருவத்தில் தானகவே இவ்விதம் கடுமையானவிரதங்களை யனுஷ்டிக்கப்புகுந்ததை விட வேறு திருஷ்டாந்தம் வேண்டுமா? (என்று கண்ணீர் ததும்பப் புலம்பினள்.)

சத்தியவதி:—நாரதர் குறிப்பிட்டகாலம் சமீபிக்கவே ஆயுள்விர்த்திசெய்யும்பலனைக்கருதிச் சாவித்திரி ஒரு கடுமையான விரதம் அநுஷ்டிக்கத் தொடங்கினள்.

காந்திமதி:— என்ன அவிவேகம்? குறுகிய ஆயுளுடன் ஜனித்த மானிடர்க்கு விரதங்களாலும் உபவாசங்களாலும் வாழ்நாளை விர்த்திசெய்யக்கூடுமோ? ஔஷதமுதலிய சிலாக்கிய மானமுறைகள் ஒருவற்கு ஆயுள் இருந்தாலொழியப் பயன் படாதென்று கவிசிகாமணியாகிய காளிதாஸர் கூறியது கேட்டதில்லையோ?

"வ்யதிகாரவியா நரோயாஷ: ।
ஸதி ஶேஷெ ஹி ஹவாய கல்பதெ ॥"

சத்தியவதி:—அடிபேதாய்! நீ சொல்வதெல்லாம் பொதுவான நியாயம். ஆனால் தவத்தினால், சாதிக்கக்கூடாதவிஷயமும் உலகத்தில் ஒன்றுண்டோ? மணிமந்திர ஔஷதங்களுக்குரிய பிரபாவம் எளிதில் அறியக்கூடியதல்ல.

காந்திமதி:— தோழீ! அதிருக்கட்டும். அப்படிப்பட்ட விரதம் என்ன? அதை நன்றாய்த் தெரிந்துகொள்ளவேண்டுமல்லவா?

சத்தியவதி:—திரயோதசிமுதல் மூன்றுதினம் உபவாசம்; பிரதமையன்று சூரியன் அஸ்தமித்தவுடன் பாரணை. இதுதான் இந்த விரதத்தின் முக்கியமான முறை.

காந்திமதி:— பிறகு சாவித்திரி என்ன செய்தாள்?

சத்தியவதி:—மாமி மாமன் முதலிய பெரியோர்களெல்லாரும் "அம்மா இது கடினமான விரதமாயிற்றே; உன்னால் சாதிக்கமுடியாது; வேண்டாம்" என்று தடுத்தும் அவ்வுத்தமி உறுதியாயிருந்து விரதத்தை அநுஷ்டித்தாள்.

காந்திமதி:— ஈசன்செயல். நாமென்னசெய்யலாம். சுவாசம்விடுவதுகூடத் தன்னிச்சையல்லவென்று பெரியோர்கள்சொல்லுகிறார்கள்.

சத்தியவதி:—கணவன்மரிக்கவேண்டியநாள்வந்ததும் வழக்கம்போற் காலையில் விறகு கொண்டுவருவதற்குக் கோடாலியை எடுத்துக்கொண்டு காட்டுக்குப் புறப்படுகிற சத்தியவானுடன் சாவித்திரி விரதத்தைமுடித்துவிட்டு ஆகாரமில்லாமலே தானும் பின்றொடர்ந்துசென்றாள்.

காந்திமதி:- கஷ்டம். பெரியவர்களிருந்தும் அக்குழந்தையைக் கணவனுடன் காட்டுக்குப் போகவேண்டாமென்று தடுக்காமல் எப்படிச் சகித்தார்களோ?

சத்தியவதி:-தோழி! அவர்கள் சாவித்திரியைப்பார்த்து "அம்மா நீ முன் ஒருபோதும் காட்டுக்குப் போனதில்லை. வழி மிகவும் கஷ்டமானது. நீயோ உபவாசத்தால் மிகவும் மெலிந்திருக்கிறாய். கால்நடையாய்ப்போக முடியாது" என்று மிகவும் தடுத்தும் சாவித்திரி அதற்கிணங்காமல் ஊக்கத்துடன் கணவனைப் பின்றொடர்ந்து சென்றாள்.

காந்திமதி:- (பெருமூச்செறிந்து கொண்டு) தலையிலெழுதிய எழுத்தையழிக்க யாரால் ஆகும்?

சத்தியவதி:-இளமைப்பருவமுள்ள சாவித்திரி மனதிலுள்ள அபிப்பிராயத்தைக் கொஞ்சமேனும்வெளியிடாமற் புன்சிரிப்புடன் அழகாய்ப்பேசிக்கொண்டு கணவனுடன் உல்லாசமாய்ச் சென்றாள்.

காந்திமதி:- அதன்பிறகு என்னநடந்தது?

சத்தியவதி:-அநேகவனங்களைக்கடந்து பழங்களைப் பறித்துவைத்துவிட்டு விறகுவெட்டுகையிற் சத்தியவானுக்குப் பொறுக்கமுடியாத தலைவலியுண்டாயிற்று.

காந்திமதி:- அம்மா! இதற்குமேல் என்னாற் கேட்கமுடியாது.

சத்தியவதி:-இளகிய மனமுடையவளே! சற்று நிதானித்துக்கேள்.

காந்திமதி:- நல்லது.

சத்தியவதி:-பிறகு சத்தியவான் மனைவியிடம் வந்து "எனக்குத் தலைவலி அதிகமாயிருக்கிறது. உலகெலாம் சுற்றுவதுபோற்றோன்றுகிறது. மனது சக்கரம்போற் சுழல்கிறது. ஒன்றும் தெரியவில்லை" என்று சொல்லிக்கொண்டு அவளுடைய மடியிற் றலைவைத்து அயர்ந்து மூர்ச்சையடைந்தான்.

காந்திமதி:- அம்மா! உன்மனது மிகவும் கடினமாயிருக்கிறது. இப்படிப்பட்ட விஷயத்தைக்கூடச் சிறிதேனுங் கலங்காமல் வருணிக்கின்றனே.

சத்தியவதி:-பிறகு சிறிதுநேரத்திற் சத்தியவான்பக்கத்தில் ஒரு புருஷன் நிற்பதைச் சாவித்திரி கண்டாள். அவன் சிவப்பு வஸ்திரமும் வெண்மைகலந்த நீலநிறமும் ரத்தமான கண்களும் கையிற் பாசமும் சூரியனைப்போன்ற காந்தியுமுடையவனாய் விரதத்தினால் மெலிந்த சாவித்திரியின் கண்ணுக்குப் புலப்பட்டான்.

காந்திமதி:- (மிகவும் வருத்தத்துடன் "அம்மா சாவித்திரி! உனக்கு இவ்விதமான கதியா ஈசுவரனால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது" என்று அழத் தொடங்கினாள்.)

சத்தியவதி:-சாவித்திரி உடனே மெதுவாய்க் கணவனுடைய சிரத்தைப் பூமியில்வைத்துவிட்டுக் கைகுவித்துச் சரீரநடுக்கத்துடன் வணக்கமாயும் கௌரவமாயும் அந்தப்புருஷனைப்பார்த்துப் பின்வருமாறு பேசத்தொடங்கினாள்.

காந்திமதி:- அப்படிப்பட்ட சமயத்திற்கூட அவளுக்கு மனங்கலங்காத தைரியம் ஏற்பட்டது வியக்கத்தக்கதுதான்.

சத்தியவதி:-சாவித்திரி அவரை நோக்கி, "பகவானே! தங்களைப்பார்த்தால் தெய்வமாகத் தோன்றுகிறது. தங்கள் வடிவம் அமானுஷமாயிருக்கிறது. தேவர்கள் நாயகமே! அடியாளிடம் கிருபைகூர்ந்து, தாங்கள் யார்? இவ்விடம் வந்த காரியமென்ன? என்று சொல்லவேண்டுமென்றாள்.

காந்திமதி:- அவ ரென்னசொன்னார்?

சத்தியவதி:-"அம்மா! சாவித்திரி! நீ கற்புநிலையுடையவள். விரதானுஷ்டானத்திலும் மிகவும் ஊக்கமுடையவள். அதனால் உனக்குப் பதில் சொல்லக் கடமைப்பட்டவனாகிறேன். அம்மா! என்னை யமனென்று சொல்லுவார்கள். உன்னுடைய கணவனாகவும், ராஜபுத்ரனாகவும் உள்ள இந்தச் சத்தியவானுக்கு இப்போது ஆயுள் முடிந்துவிட்டது. அவ

ருயிரைக் கட்டிக்கொண்டுபோவதற்காகவே நான் இங்கு வந்தேன்" என்றார் தர்மராஜன்.

காந்திமதி:— காரியமெல்லாம் காலவசமல்லவோ? நாமென்னசெய்யலாம்?

சத்தியவதி:—"தெய்வமே! தங்களுடைய தூதர்களல்லவோ இக்காரியங்களில் ஏவப்படுகிறார்களென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியிருக்கத் தாங்களே நேரில்வந்ததற்கு யாதுகாரணம்" என்றாள் சாவித்திரி.

காந்திமதி:— இவளுக்கு இந்த இளமைப் பருவத்தில் இவ்வளவு தைர்யம் ஏற்பட்டது மிகவும் ஆச்சரியமே?

சத்தியவதி:—"அம்மா! இவர் நீதிநெறிதவறாத குணக்கடலாதலால் என்னுடைய சேவகர்கள் இவரைத் தொடுவதற்கும்யோக்கியரல்லர். ஆதலின் யானே நேரில்வரும்படி நேர்ந்தது" என்று சொல்லிக்கொண்டே சத்தியவான்சரீரத்திலிருந்து கட்டைவிரலளவுடையபுருஷனை வெளியிலிழுத்துப் பாசத்தால் கட்டிக்கொண்டு தர்மராஜன் தென்றிசைநோக்கிப் புறப்பட்டார்.

காந்திமதி:— தெய்வச் செயலைமாற்ற யாரால் ஆகும்?

சத்தியவதி:—தோழீ! கொஞ்சம் கவனித்துக்கேள். கற்புநிலைவழுவாத சாவித்திரியும் அப்படிப் புறப்பட்டுப்போகும் தர்மராஜனைப் பின்றொடர்ந்து சென்றாள்.

காந்திமதி:— இதென்ன? அற்புதமாயிருக்கின்றதே!

சத்தியவதி:—அப்படிப் பின்றொடர்ந்துவரும் சாவித்திரியைப்பார்த்து, "அம்மா சாவித்திரி! நீ திரும்பலாம்; இவருக்குப் பிராணவியோகத்தின்பின் செய்யவேண்டிய சடங்குகளைச் சரியாகச் செய். வேறுலகத்துக்குச்செல்லும் கணவனுக்கு எவ்வளவுதூரம் வழிவிடலாமோ அவ்வளவுதூரம் வந்துவிட்டாய்" என்று தர்மராஜன் மொழிந்தார்.

காந்திமதி:— நன்றாயுபதேசித்தார்.

சத்தியவதி:—தர்மராஜனே! கணவனுடன்செல்வதே என்போன்றவர்களுக்கு ஏற்றமுறை. தவத்தாலும் குருபக்தியாலும் கணவனிடமுள்ள சிநேகத்தினுலும் விரதானுஷ்டானத்தினுலும் தங்களருளாலும் எனக்குப் பின்றொடர்ந்துவரும் சக்தி குன்றாமலிருக்கிறது. "ஏழடி கூடநடந்தாற் பெரியோர்களுக்கு நட்பேற்படுகிறது" ("ஸாப்தபதீநம்மைத்ரம்")என்கிற நியாயப்படி, தங்கள் முன்னிலையில் நான் ஏதோ சில வார்த்தைகள் அநுசிதமாய்ப் பேசினுலும் மன்னிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். நான் அறத்தில்வழுவாத மனமுடையவள். பொருளிலும் காமத்திலும் எனக்கு விருப்பமில்லை" என்று சாவித்திரி மறுமொழிகூறினுள்.

காந்திமதி:— யமனுடைய மனது மிகவும் கடினமானதென்றல்லவோ பெரியோர்கள் கூறியிருக்கின்றுர்கள்.

சத்தியவதி:—அப்படியல்ல, தர்மநெறி தவருத அவளுடைய வார்த்தையைச் செவியுற்றுத் தர்மராஜன் அகமகிழ்ந்து "அம்மணி சத்தியவானுடைய உயிரைத் தவிர வேறு உனக்கு வேண்டிய வரம் கேள். கொடுக்கத் தயாராயிருக்கிறேன்" என்று பகர்ந்தார்.

காந்திமதி:—மிகவும் ரசமாயிருக்கிறது.

சத்தியவதி:—"கானகத்திற் கண்ணிழந்து வருந்துகிற என்னுடைய மாமனுருக்குத் தங்களருளாற் கண் தெரியவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்" என்றுள் சாவித்திரி.

காந்திமதி:—அந்தச் சமயத்திற்கூடச் சாவித்திரியின் மனது எவ்வளவு கெம்பீரமாயிருக்கிறது.

சத்தியவதி:—"அம்மா! அப்படியே ஆகட்டும். உபவாஸத்தினுல் மெலிந்து வழிநடையாற் களைத்துப்போய்விட்டாய். இனித் திரும்பிப்போகலாம்" என்றுர் தர்மராஜன்.

காந்திமதி:— என்ன அழகான சந்தர்ப்பமிது.

சத்தியவதி:—"தேவேசா! கணவன்சமீபத்தில் எனக்குக் களைப்பென்பதில்லை. முக்கியமாய் அறநெறியில் ஊக்கமுள்ள எனக்குப் புருஷவடிவந்தரித்துவந்திருக்கிற தருமதேவதையின் முன்னிலையில் உள்ளம் பூரித்திருக்கவேண்டியதே தவிர வேறில்லை" என்று மெல்லிய குரலுடன் சொன்னுள் சாவித்திரி.

காந்திமதி:— சிறியவளாயினும் சாவித்திரி தன்னுடைய கெம்பீரமான ஸ்வபாவத்தை என்ன அழகாய்வெளியிடுகிறுள் பார்.

சத்தியவதி:—"உத்தமி! உன்வார்த்தையைக்கேட்க என்னுள்ளம் மிகவும் பூரிக்கிறது. சத்யவானுயிரைநீக்கி இரண்டாவதுவரம் கேட்டுக்கொள்" என்றார் தர்மராஜன்.

காந்திமதி:— கல்லும் கரைந்துவிடுமல்லவா?

சத்தியவதி:—"பகவானே! நாடிழந்து காட்டில் தவிக்கிற என்மாமனுக்கு மறுபடியும் ராஜ்யம் கிடைக்கும்படி அருள்புரிய வேண்டும்" என்றாள் சாவித்திரி.

காந்திமதி:— இப்படிப்பட்ட மனநிலை மக்களில் எவர்க்கும் எளிதிற் கிடைக்கக் கூடியதன்று.

சத்தியவதி:—"நல்லது; அப்படியேயாகட்டும். இனித் திரும்பலாமே" என்றார் தர்மராஜன்.

காந்திமதி:— வேறு என்ன சொல்லுவார்?

சத்தியவதி:—"தர்மதேவதையே! ஜனங்களை ஒருவழியாய் அடக்கியாளுவது தாங்கள் அங்கிகரித்த வேலை. அறநெறிதவறாத மனிதர்கள்கூட அடைக்கலம்புகுந்தவர்கள் விரோதிகளாயினும் அவர்களிடம் கருணைபுரிவார்கள். இப்படி நடக்க வேண்டியது, சநாதனதர்மமாக உலகத்திற் றங்களுடைய கட்டளையினாலேயே ஏற்பட்டுவருகிறது." என்றாள் சாவித்திரி.

காந்திமதி:— இதற்குத் தர்மராஜன் என்ன மறுமொழிகொடுத்தார்?

சத்தியவதி:—"மங்கையே! மதுரமாய் விஷயங்களை எடுத்துரைக்கின்றாய். உன்னைச் சந்தோஷப்படுத்தாமற்போவதற்கு என்னாலியலவில்லை. சத்தியவானுடைய வுயிரைநீக்கி மூன்றாவது வரம் கேட்கலாம்" என்றார் தர்மராஜன்.

காந்திமதி:— மிகவும் நன்றாயிருக்கிறது.

சத்தியவதி:—"புத்திரனில்லாத என் தந்தைக்கு வம்சம்விளங்க நூறு புத்திரர்கள் தங்கள் திருவருளால் உண்டாகவேண்டும்" என்றாள் சாவித்திரி.

காந்திமதி:— இவளுடைய தர்மத்தால் இரண்டுகுலமும் உயர்ந்து ஓங்கித் தழைத்தது.

சத்தியவதி:- "அப்படியே ஆகக்கடவது. இப்பொழுது வெகுதூரம் வந்துவிட்டாய். உடனே நீ திரும்பவேண்டியதுதான்" என்றார் தர்மராஜன்,

காந்திமதி:— மாங்கல்யத்தையடையாமல் எப்படித்திரும்புவள்?

சத்தியவதி:—"கணவன் சமீபத்தில் என் மனம் உத்ஸாகமாய் முன் சென்றுகொண்டிருக்கிறது. என்னுடைய பேச்சினுல் தங்களுடைய பிரயாணத்திற்குத் தடையுண்டாகவேண்டாம். பெரியோர்களுடைய இயற்கை இவ்விதந்தான். எல்லாப் பிராணிகளுக்கும் நல்லமனத்தால் விசுவாசமுண்டாகிறது. ஆதலால் சத்துக்களிடம் பழகப்பழக விசுவாசம் அதிகரித்துக்கொண்டுவருகிறது." என்றுள் சாவித்திரி.

காந்திமதி:— இப்படிப்பேச ஒருவராலும் முடியாது.

சத்தியவதி:—அதைக்கேட்டுத் தர்மராஜன் உள்ளம்பூரித்துமற்றொருவரம் கேட்கும்படி சொன்னுர். அவளும், "சத்தியவானுடைய வம்சம்விளங்க என்னிடம் சத்தியவானுக்கு நூறு ஔரச புத்திரர்கள் உண்டாக அருள்செய்யவேண்டும்" என்றுள். அவ்விருப்பத்தையும் அவர் முகமலர்ச்சியுடன் அங்கீகரித்தார்.

காந்திமதி:— சத்தியவான் பிழைக்காமல் இது எவ்வாறு பூர்த்தியாகும்?

சத்தியவதி:—பிறகு மறுபடியும் நுட்பமான தர்மங்களை அழகாய்ப்பேசுகிற சாவித்திரியைப்பார்த்துத் தர்மராஜன் ஐந்தாவது வரம்கொடுக்க இசைந்தபொழுது, சாவித்திரி, அவரை வணங்கிச் சிரமேற் கைகுவித்துப் "பகவானே! சத்தியவானைவிட்டு நான் எப்படி உயிர்தரிப்பேன். கணவனின்றி எனக்கு வேறுசுகம் ஏது? அவரையின்றி ஸ்வர்க்கலோகமும்வேண்டேன். அவரில்லாத ஐசுவரியத்திலும் விருப்பமில்லை. உயிரையும்விடத்தயாராயிருக்கிறேன். என்னிடம் சத்தியவானுக்கு நூறுபுத்திரர்கள் உண்டாகும்படி தாங்களே அருள்புரிந்திருக்கிறீர்கள். அவரையுங் கட்டிக்கொண்டு போகிறீர்கள். பேதையான அடியாளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவரை உயிர்பிழைக்கும்படிசெய்து, தங்கள்வார்த்தை பொய்யாகாமல் அருள்புரிதல் வேண்டும்" என்றுள் சாவித்திரி.

காந்திமதி:- என்னே கற்பின்மகிமை? என்னே தவத்தின்பலன்? என்னே உபவாசத்தின் பெருமை? அறநெறிவழுவாது நடக்கும் உத்தமிகளுக்கு எது தான் சாதிக்கமுடியாதது. அவர்களுக்கு அரியது ஒன்றுமில்லை. அருந்ததி முன்னொரு சமயம் சீதாதேவியைப்பார்த்து,

"𑌶𑌿𑌶𑍁𑌰𑍍𑌵𑌾 𑌶𑌿𑌷𑍍𑌯𑌾 𑌵𑌾 𑌯𑌦𑌸𑌿 𑌮𑌮 𑌤𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍁 𑌤𑌥𑌾 ।
𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑍇𑌰𑍁𑌤𑍍𑌕𑌰𑍍𑌷𑌃 𑌤𑍍𑌵𑌯𑌿 𑌤𑍁 𑌮𑌮 𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌜𑌨𑌯𑌤𑌿 ॥"

"நீ எனக்குச் சிசுவாயினும் சரி. சிஷ்யையானாலும் சரி. அது ஒருபுறமிருக்கட்டும். உன்னுடைய மனதின்சுத்தியைப் பார்த்தால்,பக்தியுடன் உன்னை நான் தலைவணங்கிப் பூஜிக்க வேண்டியதாயிருக்கிறது" என்றாள்.

சத்தியவதி:-பிறகு தர்மராஜன் "அம்மா! பதிவிரதாசிரோமணியே! உன்னுடைய கணவனை இதோ விட்டுவிட்டேன். நுட்பமான தர்மங்களடங்கிய உன்னுடைய வார்த்தைகளைக் கேட்டு மிகவும் களிப்புற்றேன். உன் கணவன் நல்லசரீரத்துடன் ஒருவித துக்கமுமின்றி உன்னுடன் நானூறுவருடம் சுகித்து,வேள்விகளால் தேவருள்பெற்றுத் தர்மத்தை நிலைநாட்டிப் பெரும்புகழ் பெறுவான்" என்றுசொல்லி அவளுடைய அறநெறியைப் புகழ்ந்துகொண்டு மறைந்துவிட்டார். சாவித்திரியும் உடனே திரும்பி நித்திரைசெய்தெழுந்தவன்போல், தன்னை யழைக்கும் நாயகனைத்தழுவி மாமி மாமனார்களாலும் தாய் தந்தையர்களாலும் பெருமையுடன் புகழப்பெற்றுக் குணவானாகிய கணவனுடன் வெகு காலம் வாழ்ந்து வையகத்தையும் வானகத்தையும் அலங்கரித்தாள்.

காந்திமதி:- ஆநந்தக்கண்ணீர்சொரிந்து தோழீ சத்தியவதி? அப்படிப்பட்ட தெய்வத்தன்மையுள்ள பெண்மணிகளின் முன்னிலையில் நாம்யார்? என்குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும். ரஜோகுணத்தில் முழுதுமாழ்ந்த நம்முடைய கற்பெங்கே? சுத்தசத்துவகுணமுள்ள மனநிலைவாய்ந்த அவ்வுத்தமியின் கற்பெங்கே. இச்சரித்திரத்தினல் அறநெறியின் நுட்பமான ஆராய்ச்சியை ஒருவிதம் அறிந்துகொண்டேன். மஹரிஷிகளால் உபதேசிக்கப்பட்ட உபவாசமுதலிய விரதங்களின் மேன்மையையும் அறிந்துகொண்டேன். இவ்வுபதேசத்திற்கு உனக்கு யாது கைம்மாறு செய்வேன். சாவித்திரியைப்போல் உலகிற் கீர்த்திபெறுவாயாக.

ர. கிருஷ்ணமாசாரியர், M. A.

## 1921-ஹு மார்ச்சு-மீ 18-உ (ரௌத்திரிஹு பங்குனிமீ 5 தேதி) காலை 8-மணிக்குக் கூடிய மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் காரிய நிர்வாகசபையில் முடிவுசெய்யப்பட்ட தீர்மானங்களின் விவரம்.



1. மகா-௱-௱-ஸ்ரீ M. மாணிக்கவாசகம்பிள்ளையவர்கள் B.A., B.L.,
—அக்கிராசனம்வகித்தவர்.
2. ,, ராவ்பகதூர் P. சுப்பராய ஐயரவர்கள் B.A.,
3. ,, V. S. இராமஸ்வாமிசாஸ்திரியவர்கள் B.A., B.L.,
4. ,, T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் B.A., B.L., M. L. C.
இவர்கள் வந்திருந்தார்கள்.

தீர்மானங்கள்.

I. 1920-ஹு ஆகஸ்டுமீ முதல் 1921-ஹு பிப்ரவரிமீ முடிய உள்ள சங்கம் வரவு செலவுகணக்குகளை அங்கீகரிக்கலாயிற்று.

II. 1920–1921-ம் வருஷத்திய சங்கம் வரவு செலவு மதிப்புத் திட்டம் (Budget) அங்கீகரிக்கலாயிற்று.

III & IV. சங்கத்தின் உப அக்கிராசனாதிபதியாகிய ஆண்டிபட்டி ஜமீந்தாரவர்கள், சங்கக்கட்டட நிதித்தொகை சம்பந்தமாகவும், தாம் வருஷந்தோறும் கொடுக்கும் நன்கொடைவிஷயமாகவும், 18-1-21, 3-2-21 ஆம் தேதிகளிட் டனுப்பிய கடிதங்களை நிர்வாகசபையார் சந்தோஷத்துடன் வாசித்தார்கள்.

சங்கம் அச்சாபீஸை அபிவிருத்திசெய்திருப்பது, சங்கப்பதிப்புப் புத்தகங்களின் பிரசுரம், மாட்சிமைதங்கிய கனம் அக்கிராசனாதிபதியவர்களும், ஸ்ரீமான் உப அக்கிராசனாதிபதியவர்களும் சங்கத்திற்காகக் கட்டிடம் வாங்கியசமயத்திலும், மற்றும் இதாசமயங்களிலும், மிக்க அன்போடு சங்கத்திற்கு நன்கொடையாகவும், கைம்மாற்றாகவும் பொருள் கொடுத்து உதவிபுரிந்தது முதலிய சம்பந்தமாக கௌரவகாரியதரிசியவர்கள் எழுதிய குறிப்பு (Memo) படிக்கப்பட்டது. இவர்களிருவரும் தகுந்தசமயங்களில் சங்கத்திற்குச்செய்த பேருபகாரத்திற்காக, ஷெ யார்கட்கு நிர்வாகசபையார் மனமுவந்து வந்தனமளிக்கின்றார்கள்.

V. மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் அங்கத்தினராகவேண்டுமெனக் கோரிய அடியிற்குறித்துள்ளவர்களை அங்கத்தினராக அங்கீகரிக்கலாயிற்று.

(1) மகா-ா-ா-ஸ்ரீ T. S. நடராஜையரவர்கள், தலைமைத்தமிழ்ப் பண்டிதர், முனிசிபல் காலேஜ், சேலம்.

(2) ,, P. M. வேணுகோபாலநாயுடு அவர்கள், தமிழ்ப் பண்டிதர், M. E. L. M. High School, ஆம்பூர்.

(3) ,, பு. பொ. வைத்தியலிங்கதேசிகரவர்கள், மட்டக் களப்பு, காரைத்திவு, யாழ்ப்பாணம்.

(4) ,, V. ராமச்சந்திர ஐயரவர்கள் B.A., L.T., உபாத் தியாயர், மதுரை.

VI. சங்கக்கட்டிடத்தில் தீப்பற்றியசமயம், சங்கத்தின் சாமான் களை அப்புறப்படுத்திப் பேருதவிசெய்த போலீஸ் உத்தியோகஸ்தர்கட் குச் சங்கத்தார் சன்மானம்செய்யவேண்டுமென்று மதுரை ஜில்லா போலீஸ் சூப்பிரண்டெண்டண்டு அவர்கள் எழுதிக் கேட்டுக்கொண்டபடி சன்மானத்திற்காக ரூ 105 கொடுக்க அனுமதிசெய்யப்பட்டது. ஷை தொகையை ஜில்லா போலீஸ் சூப்பிரண்டெண்டண்டு அவர்களுக்கு அனுப்பவேண்டுமென்றும் தீர்மானிக்கலாயிற்று.

VII. (a) அச்சாபீஸ்விஷயமாக சங்கம் மானேஜர் 12-3-21ல் எழுதிய குறிப்பு (Note)ம், சடகோபநாயுடு 11-3-21ல் எழுதிக் கொடுத்த மனுவும் வாசிக்கப்பட்டன.

அச்சாபீஸ் சீர்திருத்தவிஷயமாகச் செலவிட ஏற்கனவே அனுமதி செய்யப்பட்ட தொகைக்கு மேற்கொண்டு ரூ 700 அனுமதி செய்ய லாயிற்று.

(b) அச்சாபீஸ் சீர்திருத்தசம்பந்தமாக, சடகோபநாயுடு கூட இருந்து வேண்டிய உதவிபுரிந்ததற்குப் பிரதிப்பிரயோஜனமாக ஷை யாருக்கு ரூ. 100 கொடுக்கவேண்டுமென்று தீர்மானிக்கலாயிற்று.

(c) ஷை விஷயமாகத் தமிழ் லெக்ஸிகன் ஆபீஸ் பண்டிதர் மகா-ா-ா-ஸ்ரீ மு. இராகவையங்காரவர்கள் வேண்டிய உதவிபுரிந்திருப்ப தற்காக நிர்வாகசபையார் நன்றியறிவுடையவர்களாய் ஷை யாருக்கு வந் தனமளிக்கின்றார்கள்.

(d) சங்கத்தின் அங்கத்தினர்களாகிய மகா-ா-ா-ஸ்ரீ, J. M. நல்லசாமிப் பிள்ளையவர்கள், மகா-ா-ா-ஸ்ரீ கான்பகதூர் H. அப்துல் சுபான்சாஹிப் அவர்கள் ஆகிய இவ்விருவரும் காலஞ்சென்ற துக்க சமாசாரத்தைக் கேள்வியுற்றுச் சங்கத்தார் அநுதாபமொழிகூறி, அத னைப் புத்தகத்திற் பதிவுசெய்தார்கள். இவ்விஷயத்தைத் துக்கத்தில் மூழ்கிய ஷை யார்களின் குடும்பத்தார்களுக்குத் தெரிவிக்கும்படி தீர் மானிக்கலாயிற்று.

(ெ) சங்கத்தின் கட்டடத்தை முன்னைய ஸ்திதிக்குக் கொண்டு வருவதற்காக அடியிற்கண்ட கனவான்கள், பொருளுதவிசெய்வதாக அன்புடன் வாக்களித்துள்ளார்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1. | மகா-௱-௱-ஸ்ரீ, | மு. மு. வீர. வீரப்பசெட்டியாரவர்கள், பலவான்குடி. ... | ரூ 150 |
| 2. | ,, | அரு. ப. நாராயணன்செட்டியார் வகையரா பலவான்குடி ... | ரூ 100 |
| 3. | ,, | ஆத. கு. பள. மு. முத்தையாசெட்டியாரவர்கள், சிறுகூடல்பட்டி ... | ரூ 250 |
| 4. | ,, | ஆத. கு. பழ. சுப. சுப்பிரமணியஞ்செட்டியாரவர்கள், சிறுகூடல்பட்டி | ரூ 350 |
| 5. | ,, | வீர. பழ. மு. முத்தய்யாசெட்டியாரவர்கள், சிறுகூடல்பட்டி ... | ரூ 75 |
| 6. | ,, | வயி. சு. நா. நாகப்பசெட்டியாரவர்கள், சிறுகூடல்பட்டி ... | ரூ 100 |
| 7. | ,, | ராம. பழ. நா. ராமஞ்செட்டியாரவர்கள், சிறுகூடல்பட்டி .... | ரூ 75 |
| 8. | ,, | A. கிருஷ்ணசாமி ஐயரவர்கள், ஹைகோர்டு வக்கீல், மைலாப்பூர் .... | ரூ 250 |
| 9. | ,, | ஸ்ரீ வெங்கடேச ஐயங்காரவர்கள், (மதுரை) மைலாப்பூர் .... | ரூ 50 |
| 10. | ,, | N. A. V. சோமசுந்தரம்பிள்ளையவர்கள், B.A., B.L., ஹைகோர்ட்டுவக்கீல், வண்ணாரப்பேட்டை, திருநெல்வேலி | ரூ 201 |
| 11. | ,, | அ. வீர. அ. அடைக்கப்பசெட்டியாரவர்கள், பட்டமங்கலம் .... | ரூ 750 |
| 12. | ,, | துபாஷ் D. K. சையத் இப்ராஹிம் சாஹிப், துபாஷ் D. K. மஹம்மது இப்ராஹிம் சாஹிப் .... | ரூ 500 |
| 13. | ,, | ராம. அரு. ராம. அருணாசலஞ் செட்டியாரவர்கள், தேவகோட்டை .... | ரூ 150 |

இவர்கட்கு இச்சங்கத்தார் நன்றிபாராட்டி வந்தனமளிக்கின்றார்கள்.

M. மாணிக்கவாசகம்பிள்ளை,

அக்கிராசனம்வகித்தவர்.

18—3—21.

## 1921-ஞ ஜூன்மீ 6உ (துர்மதி-ஞ வைகாசி-மீ 24-ம் தேதி) காலை 11-மணிக்குக் கூடிய மதுரைத்தமிழ்ச் சங்கத்தின் காரியநிர்வாகசபையில் முடிவுசெய்யப்பட்ட தீர்மானங்களின் விவரம்.

——:o:——

1. மாட்சிமைதங்கிய கனம் B. இராஜராஜேஸ்வரஸேதுபதிமன்னரவர்கள்—அக்கிராசனாதிபதி.
2. மகா-ள-ள-ஸ்ரீ M. மாணிக்கவாசகம்பிள்ளையவர்கள் B.A.,B.L.,
3. ,, T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் B A.,B.L., M.L.C.
4. ,, M. கோபாலகிருஷ்ணையரவர்கள்.

இவர்கள் வந்திருந்தார்கள்.

### தீர்மானங்கள்.

I. 1921-ஞ மார்ச்சு, ஏப்ரல், மே-மாதங்களின் வரவுசெலவுகணக்குகளை அங்கீகரிக்கலாயிற்று.

II. சங்கத்தின் வருஷாந்தக்கணக்குகளைப் பரிசோதனைசெய்யும்படி, மதுரை ஹைக்கோர்ட்டுவக்கீல் மகா-ள-ள-ஸ்ரீ V. சுந்தரமையரவர்களைக் கேட்டுக்கொள்ளலாயிற்று.

III. சங்க வருஷோத்ஸவத்தை நடத்துவதற்குத் தெய்தி இடம் இவற்றைக் குறிப்பிடவும், வருஷோத்ஸவத்திற்கு அக்கிராசனரவர்களைத் தெரிந்தெடுக்கவும் சங்கத்தின் அக்கிராசனாதிபதியவர்களைக் கேட்டுக்கொள்ளலாயிற்று.

IV. ஆங்கிலகலாசாலைகளில்,தமிழைக் கட்டாயபாடமாக வைக்கவேண்டியதைப்பற்றி அதற்குரிய அதிகாரிகளைக் கேட்டுக்கொள்ளவேண்டுமென்று தீர்மானிக்கலாயிற்று.

V. இராமநாதபுரம் ஸமஸ்தானம் திவான் அவர்கள் அனுப்பிய 18-4-21-ம் தெய்திக் கடிதம் ரிக்கார்டில் வைக்கப்பட்டது. அதிற் கேட்டுக்கொண்டபடி வட்டிப்பணம் செலுத்தும்படி தீர்மானிக்கலாயிற்று.

VI. தபாற்கட்டணம் அதிகப்பட்டிருக்கிறபடி ஏற்படக்கூடியசெலவைச் செய்யும்படி தீர்மானிக்கலாயிற்று.

VII. Madura Ramnad Central Co-operative Bank-ல் வட்டிக்குப் போடப்பட்டுள்ள ரூ 50,011-5-0-யும் மறுபடியும் வட்டிக்குப்போடவேண்டுமென்று தீர்மானிக்கலாயிற்று.

VIII. சங்கம் அச்சாபீசு Oil Engine-ல் ரிப்பேர்செய்யவேண்டிய பாகங்களை ரிப்பேர்செய்யும்படிக்கும் அதுசம்பந்தமாக ஏற்படக்கூடிய செலவைச் செய்யும்படிக்கும் தீர்மானிக்கலாயிற்று.

IX. சங்கம் அச்சாபீசுக்கு இன்னும் தேவையான எழுத்துக்கள்முதலியவற்றை ரூ 1000த்துக்கு மேற்படாத தொகைக்குள் ஆர்டர் செய்து தருவிக்கும்படி தீர்மானிக்கலாயிற்று.

B. இராஜராஜேஸ்வரஸேதுபதி,
அக்கிராசனாதிபதி.
6—6—1921.

# ஆங்கிலத்தமிழ்ப்பரீக்ஷைத்தேர்ச்சிக்குறிப்பு.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் 1921-ஆ மார்ச்சுமீ 5உயில் நடத்திய ஆங்கிலகலாசாலைத் தமிழ்ப்பரீக்ஷைகளிற் றேறிப் பரிசும் யோக்கியதாபத்திரமும் பெறும் மாணாக்கர்களின் விவரம்.

---

## பீ. ஏ. பரீக்ஷை.

தொடர்க்கு நிர. | ரிஜிஸ்டர் நிர.

### 1-வது வகுப்பு.

1. 1. S. சோமசுந்தரம், S. P. G. காலேஜ், திருச்சிராப்பள்ளி. (முதற்பரிசு ரூ. 50 பெறத்தக்க தங்கப்பதக்கம்.)

2. 3. S. சோமசுந்தரம், கவர்ன்மெண்ட் காலேஜ், கும்பகோணம். (இரண்டாவதுபரிசு ரூ. 45.)

## எப். ஏ. பரீக்ஷை.

### 1-வது வகுப்பு.

1. 25. S. V. ஹனுமந்தராவ், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர். (முதற்பரிசு ரூ. 40 பெறத்தக்க தங்கப்பதக்கம்.)

### 2-வது வகுப்பு.

1. 30. P. S. குருசாமி, பிண்டிலேகாலேஜ், மன்னார்குடி.

2. 9. I. P. ராஜாராம், S. P. G. காலேஜ், திருச்சிராப்பள்ளி.

3. 17. S. ராமசாமி, ஹிந்துகாலேஜ், திருநெல்வேலி.

## மெற்றிக்குலேஷன் பரீக்ஷை.

### 1-வது வகுப்பு.

1. 169. J. S. பொன்னையா, C. M. S. High School, ஸ்ரீவில்லிபுத்தூர். முதற்பரிசு ரூ. 30 (வெள்ளிப்பதக்கமும் மீதரூபாவும்.)

2. 133. A. செபஸ்தியான், ஸெண்ட் மிக்கேல் ஹைஸ்கூல், கோயம் புத்தூர். (இரண்டாவது பரிசு ரூ. 25).

3. 274. A. R. ராஜகோபாலன், கவர்ன்மெண்ட் ஹைஸ்கூல், திருவாரூர். (மூன்றாவது பரிசு. ரூ. 20.)

4. 164. P. சுப்பிரமணியன், கலியாணசுந்தரம் ஹைஸ்கூல், தஞ்சாவூர். (நான்காவது பரிசு ரூ. 15.)

5. 211. R. கோபாலஸ்வாமி, நாஷனல் ஹைஸ்கூல், மன்னார்குடி. (ஐந்தாவது பரிசு ரூ. 12.)

6. 279. M. பச்சையப்பன், போர்டு ஹைஸ்கூல், விழுப்புரம்.

2-வது வகுப்பு.

1. 137. T. M. சோமஸ்கந்தன், மஹாஜன ஹைஸ்கூல், ஈரோடு.

2. 190. G. கலியாணம், முனிசிபல் ஹைஸ்கூல், மாயவரம்.

3. 61. P. ஜோதிமுத்து, அமெரிக்கன் மிஷன் ஹைஸ்கூல், பசுமலை.

4. 258. R. வெங்கிடசாமி, ஹிந்துநாடார் விக்டோரியா ஹைஸ்கூல், சிவகாசி.

5. 257. V. S. K. துரைசாமி, ஷை ஷை

6. 134. S. சிதம்பரம், ஸெண்ட் மிக்கேல் ஹைஸ்கூல், கோயம்புத்தூர்.

7. 140. S. G. கணபதி, மஹாஜன ஹைஸ்கூல், ஈரோடு.

8. 103. M. வேலாயுதம், C. M. காலேஜ், திருநெல்வேலி.

9. 293. M. S. சுந்தரேஸன், போர்டு ஹைஸ்கூல், விழுப்புரம்.

10. 63. P. S. சேஷாத்திரி, ராஜா ஹைஸ்கூல், இராமநாதபுரம்.

11. 58. V. M. நடேசன், அமெரிக்கன்மிஷன் ஹைஸ்கூல், பசுமலை.

12. 271. R. பத்மநாபன், கவர்ன்மெண்ட் ஹைஸ்கூல், திருவாரூர்.

13. 68. S. சேதுராமன், ராஜா ஹைஸ்கூல், இராமநாதபுரம்.

14. 167. B. நாராயணசாமி, கலியாணசுந்தரம் ஹைஸ்கூல், தஞ்சாவூர்.

15. 192. V. இராஜகோபாலன், முனிசிபல் ஹைஸ்கூல், மாயவரம்.

16. 262. K. சுந்தரேசன், கவர்ன்மெண்ட் ஹைஸ்கூல், திருவாரூர்.

17. 280. P. T. ரங்காராமாநுஜம், போர்டு ஹைஸ்கூல், விழுப்புரம்.

18. 128. S. R. வெங்கடேசய்யர், கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.

19. 159. P. நடராஜன், மஹாராஜா காலேஜ், புதுக்கோட்டை.

20. 290. P. S. சேஷாத்திரி, போர்டு ஹைஸ்கூல், விழுப்புரம்.

21. 185. V. பாலசுப்பிரமணியன், பச்சையப்பன்காலேஜ், சென்னை.

22. 179. A. K. வேங்கடேசன், முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூல், சென்னை.

23. 135. D. உருமாண்டையப்பன், ஸெண்ட்மிக்கேல்ஹைஸ்கூல், கோயம்புத்தூர்.

42. 200. T. R. சீனிவாஸன், நாஷனல் ஹைஸ்கூல், மன்னார்குடி.

25. 170. M. S. நமசிவாயம், C. M. S. ஹைஸ்கூல், ஸ்ரீவில்லிபுத்தூர்.

26. 218. சு. இராஜகோபாலன், விக்டோரியா ஹைஸ்கூல், பாபநாசம்.

27. 287. M. ஜெயராமன், போர்டு ஹைஸ்கூல், விழுப்புரம்.

28. 130. C. R. நாராயணசாமி, கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.

29. 180. T. S. கலியாணசுந்தரன், முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூல், சென்னை.

30. 202. B. இராஜாராம் ராவ், நாஷனல் ஹைஸ்கூல், மன்னார்குடி.

31. 292. D. ஜெயராமுலு, போர்டு ஹைஸ்கூல், விழுப்புரம்

32. 101. S. ஆறுமுகம், C. M. காலேஜ், திருநெல்வேலி

33. 168. S. ராமஸ்வாமி, கலியாணசுந்தரம் ஹைஸ்கூல், தஞ்சாவூர்.

34. 226. D. அற்புதசாமி, முனிசிபல் ஹைஸ்கூல், உடுமலைப்பேட்டை.

35. 67. N. ஸ்ரீனிவாஸன், ராஜா ஹைஸ்கூல், இராமநாதபுரம்.

36. 181. K. சதானந்தம், முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூல், சென்னை.

37. 188. T. P. ராமசந்திரன், பச்சையப்பன் காலேஜ், சென்னை.

38. 199. N. இராமநாதன், நாஷனல் ஹைஸ்கூல், மன்னார்குடி.

39. 156. R. வெங்கடாசலம், ராமஸ்வாமிசெட்டியார் டவுன்ஹைஸ்கூல், சிதம்பரம்.

40. 260. D. எட்வர்ட்ராஜ் நல்லையா, ஹிந்துநாடார் விக்டோரியஹைஸ்கூல், சிவகாசி.

41. 150. D. வெங்கட்ராமன், ராமஸாமிசெட்டியார் டவுன்ஹைஸ்கூல், சிதம்பரம்.

42. 99. K. சிதம்பரம், C. M. காலேஜ், திருநெல்வேலி.

43. 186. T. வாசுதேவன், பச்சையப்பன்காலேஜ், சென்னை.

44. 139. G. S. வேங்கடரமணன், மஹாஜன ஹைஸ்கூல், ஈரோடு.

45. 39. P. S. கிருஷ்ணன், சேதுபதிஹைஸ்கூல், மதுரை.

46. 56. B. S. வெங்கடராமன், ஸௌராஷ்ட்ரா ஹைஸ்கூல், மதுரை.

47. 277. R. ஜெயராமன், போர்டு ஹைஸ்கூல், விழுப்புரம்.

48. 126. A. R. கிரிடராமராஜு, போர்டு ஹைஸ்கூல், தர்மபுரி.

49. 165. B.N. நாராயணஸ்வாமி, கலியாணசுந்தரம் ஹைஸ்கூல், தஞ்சாவூர்.

50. 53. B. இராமநாதன், ஸௌராஷ்டிரா ஹைஸ்கூல், மதுரை.

51. 196. V. வெங்கட்டராமன், பிண்டிலேகாலேஜ், மன்னார்குடி.

52. 242. R. நாகேஸ்வரன், டேனிஷ்மிஷன்ஹைஸ்கூல், திருவண்ணாமலை.
53. 38. சா. வேங்கடராமன், சேதுபதி ஹைஸ்கூல், மதுரை.
54. 80. S. M. M. முகம்மது சாலிகு, S. P. G. ஹைஸ்கூல், இராமநாதபுரம்.
55. 197. M K. கலியாணராமன், பிண்டிலே காலேஜ், மன்னார்குடி.
56. 221. பொ. பாலசுப்பிரமணியன், விக்டோரியா ஹைஸ்கூல், பாபநாசம்.
57. 109. P. பவுஸ்தின்பருணாந்து, St. Francis Xavier's High School, பாளயங்கோட்டை.
58. 153. N. வைத்தியநாதன், ராமசாமிசெட்டியார் டவுன்ஹைஸ்கூல், சிதம்பரம்.
59. 116. A. சேசையா, St. Francis Xavier's High School, பாளயங்கோட்டை.
60. 62. S. சிதம்பரம். அமெரிக்கன்மிஷன் ஹைஸ்கூல், பசுமலை.
61. 136. V. அரங்கசாமி, ஸெண்ட் மிக்கேல் ஹைஸ்கூல், கோயம்புத்தூர்.
62. 281. S இராஜம் அய்யர், போர்டு ஹைஸ்கூல், விழுப்புரம்.
63. 96. A. V. கிருஷ்ணசுவாமி, ஹிந்து காலேஜ், திருநெல்வேலி.
64. 117. G. ஜாக்கப் பர்ணாந்து, St. Francis Xavier's High School, பாளயங்கோட்டை.
65. 212. T. S. ஸ்ரீநிவாஸன், பச்சையப்பன் ஹைஸ்கூல், காஞ்சீபுரம்.
66. 224. பி. வீ. ராதாகிருஷ்ணன், முனிசிபல் ஹைஸ்கூல், உடுமலைப்பேட்டை.
67. 204. C. கார்த்திகேயன், நாஷனல் ஹைஸ்கூல், மன்னார்குடி.
68. 275. K. மனத்துணைநாதன், கவர்ன்மெண்ட் ஹைஸ்கூல், திருவாரூர்.
69. 82. A. இராமலிங்கம், S. P. G. ஹைஸ்கூல், இராமநாதபுரம்.
70. 105. N. பிச்சாண்டி, St. Francis Xavier's High School, பாளயங்கோட்டை.
71. 89. N. M. உசேன்கான், V. M. H. School, போடிநாயக்கனூர்.
72. 93. N. இராஜகோபாலன், ஹிந்து காலேஜ், திருநெல்வேலி.
73. 131. M. தெய்வசிகாமணி, கவர்ன்மெண்ட் காலேஜ், கோயம்புத்தூர்.
74. 191. V. இரத்தினம், முனிசிபல் ஹைஸ்கூல், மாயவரம்.
75. 182. P. சுப்பிரமணியம், முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூல், சென்னை.
76. 110. M. இஞ்ஞாசிசர்வால்ய, St. Francis Xavier's High School, பாளயங்கோட்டை.

B. இராஜராஜேஸ்வரஸேதுபதி,
அக்கிராசனாதிபதி,
மதுரைத்தமிழ்ச்சங்கம்.

17—6—21

---

உ

# தனித்தமிழ்ப்பரீக்ஷைத்தேர்ச்சிக்குறிப்பு.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தார் ரௌத்திரிஞு பங்குனிமீ 22, 23, 24 (1921ஞு ஏப்ரல்மீ 4, 5, 6)-ஆம் தேதிகளில் நடத்திய தனித்தமிழ்ப்பரீக்ஷைகளிற் றேறி யோக்கியதாபத்திரம் பெறும் மாணுக்கர்களின் விவரம்.

---

## பண்டிதபரீக்ஷை.

### 2-வது வகுப்பு.

| தொடர்ச்சி நிர். | ரிஜிஸ்டர் நிர். | |
|---|---|---|
| 1. | 8. | பாலாம்பிகை அம்மாள், c/o S. சிவபாதசுந்தரம் B.A., பருத்தித்துறை, யாழ்ப்பாணம். |
| 2. | 6. | ரா. திம்மப்ப ஐயர், தமிழ்ப்போதகர், முனிசிபல்காலேஜ், சேலம். |
| 3. | 1. | அரங்கராமாநுஜ பிள்ளை, ஸ்ரீகூடலழகர் ஸந்நிதிவீதி, இராமாநுஜ கூடம், மதுரை. |

---

## பாலபண்டிதபரீக்ஷை.

### 2-வது வகுப்பு.

| | | |
|---|---|---|
| 1. | 24. | N ரங்கனுதய்யர், மகாதானபுரம்கிராமம், கன்னிமாகுமரிபோஸ்டு, திருவிதாங்கூர். |
| 2. | 10. | ஆ. பூவராகன், மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை, மதுரை. |

---

## பிரவேசபண்டிதபரீக்ஷை.

### 2-வது வகுப்பு.

| | | |
|---|---|---|
| 1. | 28. | சிவப்பிரகாசன், மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை, மதுரை. |

---

B. இராஜராஜேஶ்வரஸேதுபதி,

அக்கிராசனுதிபதி,

மதுரைத்தமிழ்ச்சங்கம்.

17—6—21

உ

# சிறைவிடந்தாதி.

(௨௧௩-ம் பக்கத்தொடர்ச்சி.)



வாழ்வாரும்பெருவறுமையுழப்பாரும்வறிதுழன்றுவாழ்வோர்சென்று
தாழ்வாருமலதுதண்டைத்தாள்பரவிப்பிறப்பொழிப்பார்தம்மைக்காணேன்
சூழ்வார்தெண்டிரைப்பரவைச்செந்தூரனடிக்கமலந்தொழுதுமேன்மேல்
வீழ்வார்கற்பகநீழல்வீற்றிருப்பதுணரார்கொல்மெய்பெற்றாரே. (௨௭)

பெற்றாரும்பெறவேண்டிப்பெருந்தவங்களரிதியற்றிப்பெறுவான்வேதங்
கற்றாருநினதிருத்தாளலதுபெறக்கருத்திருத்திக்கருதாரந்தோ
வற்றாரிலறப்பேதையெளியனுனைவழுத்துவதொன்றறியேன்வாழி
வற்றாதபெருங்கருணைக்குருபரனேகருங்கலபமயிலினனே. (௨௮)

ஆனேறுங்கடவுடிருப்பெருமானும்பனிமலரந்தணனும்வேரிக்
கானேறும்பசுந்துளபக்கார்க்கடல்போற்பாற்கடற்கண்வளருந்தேவும்
வானோருமுறைபாவவாளவுணர்க்கடந்தமறைநெறியினின்றோய்
கோனேபன்னிருதடந்தோட்குமாரகுருபரசேவற்கொடியினனே. (௨௯)

கொடியாரெனினுமாறெழுத்திற்குழையாரெனினுநினைவணங்கா
முடியாரெனினுங்கொலைபலவுமுடிப்பாரெனினுமுருகவொரு
வடிவேறனையென்றொருபொழுதுவழுத்துவாரேலவர்தமக்கே
யடியேன்முழுதுமவரடிக்கேயாட்பட்டிருப்பதளியேனே. (௩0)

வேறு

அளிகிளைத்தெழுகடம்பணிதடம்புயத்தறுமுகப்பெருமானைக்
களிவிளைத்தலர்முளரியந்தண்டையங்கழலிணைபரவாரால்
விளிதழற்பொறிவிழிவழிசிதறிடவெகுண்டெழுநமனார்கைத்
துளியொழுக்கியசெம்புனற்றிரிதலைச்சூற்படைக்கிடப்பாரே. (௩௧)

பாரும்வையமுமெண்டிசைப்பரவையுமன்பதைப்பரப்பெல்லா
மாரும்வானெயிற்றவுணரேயாமெனமொருதனியழல்கான்று
ரூடங்கவுந்தனித்தவைவேற்படைநினைதரத்தொடர்ந்தோடி
யிரும்வல்வினைமுருகனென்றேத்துறிலெவ்வினைகழியாதே. (௩௨)

கழிதரும்பிறப்பிருவினைவிதிவழிக்காண்பதக்கமலத்தோன்
பொழிதருந்துணரேந்திநின்றுண்மலர்போற்றுவதறியார்யார்
பிழிதரும்பியகடம்பணிமுருகநின்றிருப்பெயரொன்றேனு
மொழிவரும்படிதுதிப்பவர்க்கவ்வினைபூரொடும்புகலாதே. (௩௩)

புகலருஞ்சதுமறைப்பொருளாற்கொருபிரணவப்பொருள்பேசிச்
சகமடங்கலுந்தருபொருள்பாகதியனைத்தினுந்தானாகி
யகநிறைந்தருள்பரம்பொருளொருபொருள்செந்திலம்பதிதோன்றிக்
குகனெனும்பெயர்கொண்டுநின்றதுகண்டுகொண்டுதொண்டுவந்தேனே. (௩௪)

உவந்தசிந்தையுமுருகியநெஞ்சமுமொருதனித்துணைத்தாண்மீ
திவர்ந்தகண்களுமுருகனென்றேத்தலுமெய்தலும்பெறுவேனோ
சிவந்தபுன்றலைச்சூர்ப்படைமடிபடுசெம்புலந்தொறும்வெம்பேய்
கவந்தமாடவேற்படைதொடுமறுமுகக்கடவுளெம்பெருமானே. (௩௫)

மானவேல்விழிச்சுந்தரிவனமுலைக்குங்குமமகவேந்தன்
கானவார்பொழிற்கற்பகவரசுவெங்களிற்றிருபுடைதாங்குந்
தானவாரிவானரம்பையர்மங்கலந்தழைக்குமோமுருகோனே
ஞானநாதநின்வேற்படையில்லெனிலின்னமுநலங்கூர்ந்தே. (௩௬)

கூரெயிற்றிரும்பன்றியாய்நெடுநிலங்கொண்டகார்முகிலென்கோ
மூரிவானமும்வையமும்படைத்தருண்முளரிநான்முகனென்கோ
வோர்விலாப்பெருந்தனிமுதலாகியயோகிநாயகனென்கோ
போரயிற்படைக்குமரனேநின்னையான்யாரெனப்புகல்கேனே. (௩௭)

யாரும்யாவையுமண்டமுமகண்டமுமிவைசுமந்திடைநின்ற
மேருமால்வரைமுதலிறந்தநித்தியவெறுவெளிவெறும்பாழா
யோர்வருந்தனிப்பிரணவத்துள்ளொளியொருவனீயுனையொன்றுற்
றேறிநின்னிலையளப்பவரெவர்கொலோசெந்திலெம்பெருமானே. (௩௮)

பெருகுகங்கையஞ்சடைமுடியவற்கொருபிரணவப்பொருள்பேசி
யொருவனின்னிலையுணர்த்தினையுனையலதுனையுணர்ந்தறிவார்யார்
சுருதிநான்முறைதொடர்ந்தறிபுராணமுமாகமத்தொன்னூலுங்
கருதியின்னமுங்காண்கிலவைங்கரக்கயமுகற்கிளையோனே. (௩௯)

இளையமென்மருங்கிளமுலைக்குறமகட்கிறைவனீயெளியேற்கொன்
றுளமிரங்கிலையிகழ்ந்தனையெனினுநானுனைமறந்தொழிவேனோ
விளைசினம்பயின்றீன்றவரொறுப்பினுமென்சிறுகுதலைக்கான்
முளைதவழ்ந்தவர்மடிபிடித்தேறுமான்முனியவும்பெறுவாரே. (௪௰)

வேறு

பெறலரும்பதம்பெற்றவர்பெறுகிலார்பெறுவதற்கருந்தவம்புரிவோ
ரிறுதரும்பொழுதியாவையுமிறந்துபோயொடுங்கியுமிடாதெனப்படுமே
யறுமுகப்பெருங்கடவுளேகுன்றுதோறமர்ந்தருளாதிமற்றிமையோ
ருறுபதங்களுமோமெனும்பிரணவத்துன்னொடுமொடுங்குவதன்றே. (௪௧)

அன்றுமின்றுமென்றளப்பருங்காலங்களவைகழிந்தப்பெரும்பதங்க
ளென்றுமின்றவையிறையொடுமிறப்பினுமிறப்பிலாயென்றுநீயிளையாய்
நின்றனைப்பதம்பாவினும்வழுத்தினுநினைவினுந்தழல்விழிப்பகட்டுக்
குன்றுகைத்தெழுமறலிகைப்படுவரோகுருபரகுமாரதேசிகனே. (௪௨)

தேசிகப்பெரும்பொருளெனநின்றனைமறைமுதலெழுத்தெனச்சிறந்தா
யேசிலெட்டெழுத்தாயினையாறெழுத்தெனத்திரிந்தெங்கணுநிறைந்தாய்
பேசிலஞ்செழுத்தாகியெப்பொருடொறும்பிறந்தனைபிறப்பிறப்பொழிந்தாய்
பூசல்வண்டறைகடம்பணிமுருகநின்பொருண்மயமுணர்ந்தெவர்புகல்வார். (௪௩)

வார்கழற்றிருத்தண்டையந்தாமரைமலரடிப்பொடிபடுசிறுதா
ளார்முடித்தவர்புரஞ்செறுத்துயர்ந்தவர்க்கணிதருபூதியிற்சிறந்த
தோரிடக்கொடிமாகதமுகிண்முலைச்சந்தனந்திமிர்ந்தெழிலொழுகக்
கூரயிற்படைமுருகமற்றிமையவரின்னமுங்கிடைத்திலர்கொதிப்பார். (௪௪)

கொதிகொள்வேற்படைமுருகனையறுமுகக்குருபரகுமரதேசிகனை
விதிதலைப்படுத்தருமறைவிளக்கியவிமலனைவேதனூற்பொருளைப்
பொதியவிழ்த்தலர்பங்கயப்பொலன்கழல்பாவினிற்போற்றினர்புகல்வா
ரதிருமார்கலிநெடுநிலத்தன்னையர்கருக்குழியழுக்குறாதவரே. (௪௫)

தவமியற்றுவர்தருமமென்றியற்றுவர்தடவரைப்பொருசருகருந்திப்
பவர்கொடுஞ்சடைமுடிபொருத்தருநதிகுடைந்துபூவலஞ்சுழற்படுவா
ரிவரியற்றுவதென்கொலோமுருகனைக்குமரனையீராறுதடந்தோ
ளவனையேத்திலராயினந்தகன்புரத்தருநரகவர்க்கலாதிலையே. (௪௬)

இலைதடஞ்சினைபொதுளியகற்பகத்தருவரசினையனவிரும்பேன்
மலர்வனப்பதம்வாய்விடுத்துரைக்கிலேன்மற்றுளபதவியிற்குறுகே
னலகினின்பதங்கருதிநின்றொண்டரோடாடுவேனுதரித்தமர்வே
ளிலவுகக்கியவேற்படைக்குமரநின்றிருவுளக்கிலைமையோர்க்கிலனுல். (௪௭)

ஓரநின்றநெஞ்சருகிலைமுருகனென்றொருபொழுதேத்திலையொருக்கால்
வீரவேற்றிறம்பேசிலையாசறமெய்விதிர்த்தழுதழுதிரங்கிச்
சூரடங்கலுகடந்தருகடந்தருதோகைகண்டேத்திலைமனனே
பீரமன்றிமற்றென்னெடும்பிறந்தனையென்செய்கேன்யானுனக்கினியே. (௪௮)

(தொடரும்)

சு. நல்லசிவன்பிள்ளை,
உதவியுபாத்தியாயர்,
தமிழ்ச்சங்கக்கலாசாலை, மதுரை.

---

(குறிப்பு) இஃது அருளொடுசெய்யும் அறமே இன்பம்பயக்கு மென்கிறது. பண்பாவது என்றது அவாய்நிலையான்வந்தது. அத்தன்மைத்தாக என்றது அருளுடைமையென்னும் அவ்விலக்கணமுடையதாக என்றவாறு. ஆராய்ந்து நிரம்பவறிதலாவது அறநூல்பலவற்றையுங் கற்று ஐயமின்றித் தெளிவடைதல். இவ்வறிவு அறத்தின்காரணவுணர்வாகி அதன்காரியமாகிய அறத்தைச் செய்விப்ப தொருதலையாதலால், அறிந்தார் அறஞ்செய்தோராவர் என உரை விரித்துரைக்கப்பட்டது. பிறரால்விடுதலாவது அற மொருபொருளென்றுகருதாத உலகாயதிகர் முதலிய பிறர்சொல்லுஞ் சொற்களைக் கேட்டு விடுதல் என்றவாறு. பாதுகாவாவொழுக்கம் எனக் கூட்டுக. பாதுகாவாவொழுக்கம் என்றது செய்வோனை அறமாகிப் பாதுகாக்கமாட்டாத பிறவொழுக்கமென்றவாறு. அவை நடரும் விடரும் தூர்த்தருமுதலிய நகைவகையராகியமாக்களுக்குக் கொடுக்கும் அநுவிலாக்கொடை முதலியனவும், அறநூலுள் விதியாதனவும். முயலைவிட்டுக் காக்கையைத்தின்னுமதனோடொக்குமென்றது மென்மையுஞ் சுவையு முடைத்தா யுண்ணுதற்குரியதாய்க் கொள்ளப்பட்ட முயலினதூனை யொழித்து, வன்மையும் வெறுட்டுமுடையதா யுண்ணுதற்குரியதன்றென்று விலக்கப்பட்ட காக்கையினூனை நுகருமதனோடொக்கு மென்றவாறு. முயலூனுக்கும் காக்கையூனுக்கு முள்ள வேற்றத்தாழ்வுபோலும் அருளுடையறத்திற்கும் அஃதில்லாவறத்திற்கு முள்ள வேற்றத்தாழ்வென்பது கருத்து. முயல்விட்டுக்காக்கைதினல் என்ப திதன் பழமொழி. இது "ஏரார்முயல்விட்டுக்காக்கைப்பின் போவதே" எனச் சிறியதிருமடலுள்ளும்*, "அன்பி நத்தியடியேனைக் கூழாட்கொண்டருள்செய்தவாரூரர்தம், முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக்காக்கைப்பின்போனவாறே" எனத் தேவாரத்திலும்† வழங்கப்பட்டது.

142. நாணார் பரியார் நயனில செய்தொழுகும்
பேணா வறிவிலா மாக்களைப்-பேணி
யொழுக்கி யவரோ டுடனுறை செய்தல்
புழுப்பெய்து புண்பொதியு மாறு.

* கண்ணி-8.

† திருநாவுக்கரசுநாயனார்தேவாரம், திருவாரூர்ப் பழமொழிப்பதிகம். பாசுரம் 2.

எ-து, பழிநாணுத பிறர்மேலன்பின்றி நன்மையில்லாதனவற்றைச் செய்தொழுகும் பிறரால் விரும்பப்படாத அறிவில்லாதமாக்களை விரும்பிநடாத்தி யவரொடு தாமுடனுறைதலைச்செய்தல், சிமிழின்மூழ்கியபுழுவை யுள்ளேபெய்து தம் புண்ணைப பொருத்தியதனேடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, தமராயிருப்பினும் சிற்றினத்தாரை யபிமானிக்கலாகாதென்கிறது. பேணி—தமரென்றுவிரும்பி. நடாத்தி—நல்லொழுக்கில் தாமே நடவாத அவரை வலிந்து நடத்தி. உடனுறைதலைச்செய்தல்—அவரோடு ஒருகுடியாகக் கூடிவாழ்தல். சிமிழ் மூழ்கியபுழு—தம்முடலிற் புண்ணையுண்டாக்கி யுடைந்துபுறப்படும் சிமிழின் மூழுகியபுழு; இது தம் குடியுடைபார்க்குந் துன்பமுண்டாக்கி அக்குடியைவிட்டு விலகும் சிற்றினத்தார்க்கு உவமை. சிமிழ்—அவர் மூழ்கிக் கிடக்கும் இழிகுணத்துக்கு உவமை. தாமே புறப்பட்டொழிதற்குரிய சிற்றினத்தாரைத் தமரெனறு அபிமானித்து அகத்துட்கொண் டுடனுறைதலைச் செய்தல் அவ்வாறொழிதற்குரியபுழுக்களைத் தமவென்றபிமானித்துப் புண்ணிற்பொதிந் துடலகத்துட்கொண்டு மூடுதலாலுண்டாகும் துன்பம் போலும் இறந்துபடுந்துன்பினை யுண்டாக்கு மென்பதாம். இதன் பழமொழி "கண்ணோட்டம் செய்பார் கருவிபிட்டாற்றுவார், புண்வைத்து மூடார் பொதிந்து" என நீதிநெறிவிளக்கத்துள்ளும்* வழங்கப்பட்டது.

143. பரந்தவர் கொள்கைமேற் பல்லாறு மோடார்
நிரம்பிய காட்சி நினைந்தறிந்து கொள்க
வரம்பில் பெருமை தருமே பிரம்பூரி
யென்றும் பதக்கேழ் வரும்.

எ-து, பலவேறுவகைப்பட்டுப் பரந்த சமயத்தாரொழுக்கத்தின்மேற் பலநெறிக்கண்ணும் மோடாதே யச்சமயத்தார்கொள்கைகளுள் நன்மைநிரம்பிய கொள்கை யாராய்ந்தறிந்தே தமக்குக் கொள்கையாக வொழுகுக; ஒழுகினு லவ்வொழுக்க மெல்லையில்லாதபெருமையைத் தரும்; பிரம்பூரியென்னும்பெயருடையநெல் என்றும் பதக்கேழ்வருமாதலா லதுபோல வென்றவாறு.

(குறிப்பு) இது, சமயவொழுக்கநெறிபலவற்றுள்ளும் அவரவர் தகுதிக்கேற்றநெறியொன்றுள் நின்றொழுகுதல் சாலுமென்கின்றது. பலவேறுவகைப்பட்ட சமயங்களாவன:—வைதிகமும், அவைதிகமும் அவற்றின் அகமும் புறமுமாகி யொன்றினென்று வேறுபட்ட பலசமயங்கள்.

* செய்யுள்-௬௦.

அச்சமயத்தார்கொள்கையாவது அவ்வவர் கொண்டொழுகும் வெவ்வேறொழுக்கவகைகள்; அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் முதலியனவும் பிறவுமாம். ஒழுக்கத்தின்மேல் என்றது ஒழுக்கங்களுள்ளே என்றவாறு. பலநெறிகளாவன, தாசமார்க்க முதலியன. ஓடாதே என்றது தத்தம் நிலைமைக்கியலாத ஒழுக்கநெறிகள்பலவற்றையுங்கொண்டொழுகாமல் என்றவாறு. அச்சமயத்தார்கொள்கைகளுள் என்றது அவ்வவர் சமயவொழுக்கநெறிகளுக்குள்ளே என்றவாறு. நன்மை நிரம்பியகொள்கை என்றது உபாசகராகிய தமக்குக் கடைபோகவொழுகுமாறு சீர்மை நிரம்பிய யாதாயினுமோ ரொழுக்கநெறியை என்றவாறு. தமக்குக் கொள்கையாக—தாங்கொண்டொழுகும் ஒழுக்கநெறியாக. எல்லையில்லாத பெருமை—வீடுபேறு. "பிரம்பூரி யென்றும் பதக்கேழ்வரும்" என்றது பிழைபட நின்ற பழமொழிக்கூற்று. இது "பரம்பூரி—யென்றும் பதக்கே வரும்" என்றிருக்கவேண்டும். இதற்கிணங்க உரையையும், "பரம்பூரி யென்னு நெல் என்றும் பதக்கேவருமாதலால் அதுபோல" என்று திருத்திக்கொள்ளவேண்டும். பரம்பூரியென்னும்நெல்—பரம்பூரியாகிய நெல். பரம்பூரி—பரம்புமாமூர்ந்து பழனந்திருத்தியகூலி. என்றும் என்றது கரம்புநிலத்தூர்ந்தனுன்றும், களர்நிலத்தூர்ந்தனுன்றும், வளவயலுளூர்ந்தனுன்றும் என்றவாறு. பதக்கேவரும் என்றது அவ்வூர்ந்தகூலியாகிய பதக்குமேற் கிடையாமற்போகாது என்றவாறு. இதன்பழமொழி "கரம்பூர்ந்தாலென்ன? களரூர்ந்தாலென்ன? பரம்பூர்ந்தகூலி பதக்கு"* என்பதாம். இது, ஒருவன் ஒருவனை யொருதொழிலி லேவிக்கொள்ளுமிடத்து அத்தொழின்முற்றுதலாலே ஏவிக்கொள்வோனடைதற்குரிய வினைபொருளின் இன்மை யுண்மையும் ஏற்றத் தாழ்வும் கருதாது தொழில்புரிந்தோனுக்கு அத்தொழில்புரிந்தவளவானே அதற்குரியகூலி தவறாதளிக்கக்கடவன் என்னுங் குறிப்பில் வழங்கப்படுவதால், இறைவனருள்ய சமயவொழுக்கநெறிகளுள் ஏற்றத்தாழ்வுபாராது ஏதேனுந் தமக்கியலுவதொன்றைக் கடைப்பிடித்தொழுகுவார் இறைவனதருளை யேற்றத்தாழ்வின்றித் தவறாதுபெறுவர் என்பதை முடித்தற்குப் பொதுவகையால் எதுவும், சிறப்புவகையாற் றிட்டாந்தமுமாயிற்று. இப்பழமொழிப்பொருள் "மாறடித்தகூலி மடிமேலே" எனப் பிறிதொரு

* பதக்கு இரண்டுமரக்கால் நெல். இக்காலத்து முத்திரைபபடி இரண்டே கால் கொண்டது ஒருகூலிமரக்கால் என்பது மதுரைசார்நாட்டுவழக்கு.

வாய்பாட்டாலும் வழங்கப்படும். இங்கு மாறடித்தலென்பது புழுதிநெல் விதைப்பில் உழவுசான்றைப் புதையன்மாரார்தற்குப் பெயராகும். இதனுள் அடித்தல் என்பது வூர்தற்பொருளுணர்த்துமென்பதைப் பாம்பூர்தலைப் பாம்படித்தல் என்றும், பிணையலூர்தலைப் பிணையலடித்தல் என்றும் வழங்குதலாலும் அறிக. மடி—முன்றானை (முந்தி). இது தவறு கடனைபெறாதற்குச்சாதன மென்னும் குறிப்புணர்த்திவருவது. இதனை "வெந்ததுபோதும் முந்தியிலேபோடு" என்னும் வழக்காலு முணர்க. இதனால், "மாறடித்தகூலி மடிமேலே" என்பதற்குப் புதையன்மாரார்தவபலுள்விளையும் நெல்லின் ஏற்றத்தாழ்வுகருதாது அப்புதையன்மாரார்தற்றொழின்மாத்திரங்கொண்டு தவறாது கூலிகொடுப்பாரைப்போல, ஒருவினை யொருதொழிலிலேவிக்கொள்வோன் தனக்கு அத்தொழிலால்விளையும் பயனளவுகருதாது தொழிலளவேகருதிக் கூலியளிக்கக்கடவன் என்னுங் குறிப்புத் தோன்றுதல் காண்க. இப்பாட்டினால் இறைவனருளிய வேதாகம வொழுக்கநெறிகள் பலவிருப்பினும், அவற்றுள், தத்தமக்கியலுவ தியாதேனுமொன்றைக் கடைப்பிடித்தொழுகுதல் பயனுற் றூழ்வின்றிச் சால்புடையதாகும் என ஒழுக்கநெறியின் மயக்கறுக்கப்பட்டது. இவ்வாறே கீதையிலும், "யாவாநர்த உதபாநே ஸர்வத: ஸம்ப்லுதோதகே । தாவாந்ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத: ॥"* என்று சொல்லப்பட்டிருக்கிறது.

114. தமரல் லவரைத் தலையளித்தக் கண்ணு
மமராக் குறிப்பவர்க் காகாதே தோன்றுஞ்
சுவர்நிலஞ் செய்தமைபக் கூட்டியக் கண்ணு
முவர்நில முட்கொதிக்கு மாறு.

எ-று, தமக் குறவல்லாதபகைவரைத் தாம் தலையளித்தாலு மது தலையளிப்பாகாதே விரும்பாதகுறிப்பா யப்பகைவர்க்குத் தோன்றும்; சுவர்நிலமாகச் செய்து நிரம்பச் செறிக்கூட்டினவிடத்து மவ்வுவர்மண் ணுட்கொதித் தெழுமாறுபோலு மது வென்றவாறு.

(குறிப்பு) இது, பகைவரைத் தலையளிபுரிந்து ஒட்டிபொழுகலாகாதென்கிறது. கீழ் இரண்டும் மண் என்னுந்துணையாய்நின்றன. "உவர்நிலமுட்கொதிக்கும்" என்பது இதன் பழமொழி. இது ஒன்றன் கெட்டசுபாவம் மாறாதென்னுங் குறிப்பில் வழங்கப்படுவது.

* அத்யாயம் 2. ஸ்லோகம் 46.

இதனை, ஒருவற்கு அரணுயுள்ள சுவர்மண்ணின்வேறுபட்ட உவர் மண்ணை அச்சுவர்மண்ணோடு தண்ணீர்வார்த்துக்குழைத்து ஒன்று கூட்டி ஒருபோரணைக் சுவரிட்டுவைப்பினும், அவ்வுவர்மண் நாளடைவில் உட்கொதித்துதிர்ந்து அச்சுவரையடியறுத்துவீழ்த்தி அரணழிப்பதுபோலத் நமக்கரணுயுள்ள தமரோடுபொருந்தாத பகைவரைத் தண்ணளிபுரிந்து தம்முடன்கூட்டித் தமக்கொரு போரணைக்கொள்ளினும், அவர் நாளடைவில் உட்கொதித்துக் கிழமைத் தொட்டாது விட்டுவிலகி அரணழிப்பரெனப் பொருளொடுபொருத்தியுரைத்துக்கொள்க.

145. ஒல்லாத வின்றி யுடையார் கருமங்க
ணல்லவா நாடி நடக்குமா—மில்லார்க்
கிடரா யியலு மிலங்குநீர்ச் சேர்ப்ப
கடலுள்ளுங் காண்பவே நன்கு.

எ-து, இயலாதனவின்றிப் பொருளுடையார் செய்யத்தொடங்கியகருமங்க ணல்லனவேபெற்றுநடக்கும்; பொருளில்லாதார்க்குச் செய்யத்தொடங்கிய கருமங்க ளிடராயேநடக்கும்; இலங்குநீர்ச்சேர்ப்பனே! அவ்வுடையார் கடலுள்ளே புக்காலுந் தமக்குநல்லனவாவனவேசெய்துகொள்வாரென்றவாறு.

(குறிப்பு) இது, கைப்பொருளுடையாராய்க் கருமம்புரிக என்கிறது. இயலாதனவின்றி என்றது செய்யத்தொடங்கியகரும மினிது முடிதற்குச் சாதகமாகாத போலிக்கருவிகளைத் துணையாகப்பெறாமல் என்றவாறு. நல்லன—அக்கரும மினிதுமுடிதற்குரிய சிறந்தகருவிகள். இடராயே நடக்கும் என்றது இடருடையதாகி யழியுமென்றபடி. இதனாற் கைப்பொருளுடைமையி னன்மையை விதிமுகத்தாற்கூறியதுணையானமையாது எதிர்மறைமுகத்தான் அஃதின்மையின்றீமையு மொருங்கு கூறப்பட்டது. "கடலுள்ளுங்காண்பவே நன்கு" என்றது பழமொழிக் கூற்று. இதன் பழமொழிவடிவம் வழக்குஞ் செய்யுளும்நோக்கி வந்துழிக் கண்டுகொள்க.

146. கடுப்பத் தலைகிறிக் காலு மிழந்து
நடைத்தாரா வென்பதூஉம் பட்டு—முடத்தொடு
பேர்பிறி தாகப் பெறுதலாற் போகாரே
நீர்குறி தாகப் புகல்.

எ-து, மிகத் தலைகிழிந்து தங் காலுமிழந் தக்கால்க ணடையைத் தாரா வென்றசொல்லவும்பட்டு முடத்துடனே பிறிதொருபெயர்பெறுவாராதலா னீர் சுருங்கி யளவுபட்டவழி யிழிந்துபோகலாயிருக்கப் போதலரியபுனலுட் புணைமுத லாயினவற்றாற் போகாரென்றவாறு. இதனாற் போந்தபொருள் தமக் கேதம் படவருவன செய்யலாகாவென்றவாறும்.

(குறிப்பு) இது, எளியவழியைக் கைவிட்டு அரியவழியிற் செல்ல லாகாதெனைகிறது. எளியவழியாவது ஒருகான்யாற்றுவெள்ளம் அகன்று பரந்தவிடத்து இழிந்துநடந்துபோம்படி ஆழமின்றியிருப்பதுபோலும் ஏதமின்றிச்செல்லும் பலதுறைகள். அரியவழியாவது அவ்வாறு பாறைநெருக்கும்பள்ளத்திழிவுமுள்ளவழி ஒடுங்கி யாழ்ந்து விசையுடன் செல்லும் வெள்ளத்துப் புணைபற்றிச்செல்லுந் துறைபோலுந் துறை கள். நீர்குறைந்தாகப்புகல் என்றது நீர்சுருங்கச்செல்லுதல் உளதாயிருக்க வென்றவாறு. உளதாயிருக்கவென்பது குறிப்பெச்சம். போதலரியபுன லுட் புணைமுதலாயினவற்றால் என்பது பிறகுறிப்பால் வருவித்துரைக் கப்பட்டது. தலைகீறலும் காலிழத்தலும், பாறையிற் றாக்குண்ணலா லுண்டாகும் அவயவவிகாரங்களெல்லாமடங்க ஆதியு மந்தமுமா யுரைக் கப்பட்டன. நடைத்தாராவென்பதூஉம்பட்டு என்றது அவ்வவயவங்கள் விகாரப்படுதன்மாத்திரமேயன்றி யவற்றின்றொழினிகழ்ச்சியு மிலவா மொழியுமென்பதை யுணர்த்துதற் குபலக்கணமாயிற்று. முடத்துடனே பேர்பிறிதாகப்பெறுதலால் என்றது அம்மட்டினொழியாது முடம், கூன், கண்ணறை, காதறை, கதுவாய் முதலியபெயர்களையும் பெறுதலால் என்றவாறு. பெறுதலாற் போகார் எனக் கூட்டுக. இப்பாட்டுமுழுதும் பழமொழிக்கூற்று. இது பிறிதுமொழிதலாய்நின்று தமக்கு ஏதம்பட வருவன செய்யலாகாதென்னும் விலக்குவிதிப்பொருளைமுடித்தற் குப காரமாயிற்று. நமக்கு இதமாவனசெய்யவேண்டுமென்பது கருத்து. இப்பழமொழிவடிவமும் வழக்குஞ் செய்யுளுநோக்கி வந்துழிக் கண்டு கொள்க.

147. பொருளல்லார் கூறிய பொய்க்குறளை வேந்தன்
தெருளுந் திறந்தெரித லல்லால்—வெருளவெழுந்
தாடு பவரோடே யாடா ருணர்வுடையா
ராடுமேனைப் பொய்க்காலே போன்று.

எ-து, ஒருபொருளிற்கொள்ளப்படாதோர்சொல்லிய பொய்யாகியகுறளையைப் பொய்யென்று வேந்தன் றெளியுந்திறங்களை யாராய்ந்து வேந்தனைத் தெருட்டுதலல்லாற் குறளையைச்சொல்லப்பட்டவர்கள் வெருளும்படி யரசன் மருங்கேயிருந்தவுணர்வுடையார் குறளைசொல்லியாடுகின்றவர்களுடனே தாமுமெழுந் தாடுமணைப்பொய்க்காலேபோன் றுடா ரென்றவாறு.

(குறிப்பு) இது, அரசனையணுகியிருக்கும் அறிவுடையோர் கோளுரைப்பாரோடு கூடியுரைக்கலாகாதென்கிறது. ஒருபொருளிற்கொள்ளப்படாதோர் என்றது பலானு நன்குமதிக்கப்படும் யாதேனும் ஒருநிலைமையில்லாதவர் என்றபடி; அந்நிலையுடையோர் பொய்க்குறளை கூறுரென அவரை விலக்கியவாறு. குறளை—கோளுரை; அதாவது உரைக்கப்படுவோர் முன்னிற்பக்கூறாது புறங்கூறல். பொய்க்குறளை என்றது மெய்க்குறளையை விலக்கியவாறு. குறளையைச் சொல்லப்பட்டவர்கள்—கோளுரைப்போராற் சொல்லப்படுவோர். குறளைசொல்லியாடுகின்றவர் என்றது அபிநயத்தோடுசொல்லும் அவரது இயல்புகூறியவாறு. ஆடார் என்றது உரையாடார் என்றவாறு. “ஆடுமணைப் பொய்க்காலேபோன்று” என்பது பழமொழிக்கூற்று. ஆடுமணை—தூங்குமஞ்சம்; அதன்பொய்க்கால்—அதனைத் தாங்கிநிற்கு மறுப்புப்போலத் தோற்றத்திற்காட்டி ஒட்டிக்கொண்டு உடனாடும் அத் தூங்குமஞ்சக்கால்கள். இவை முன்னும் பின்னும் முரண்படச்செல்லுந் தூங்குமஞ்சத்தை யொட்டிநின்று தாங்குவனபோன்று உடன்செல்லுதலால், முன்னும் பின்னும் முரண்படச் சொல்லும் பொய்க்கோளுரையைத் தாங்கியுரைப்பார்போன் றொட்டியுடன் சொல்லும் அறிவிலார்க் குவமையாயின. “ஆடுமணைப் பொய்க்கால்” என்ற தொடர்மொழி பழமொழிக்கூற்றாய் அறிவுடையோர் அங்ஙனம் செய்யார் என்னும் பொருளை முடித்தற்கு விசேடணமாயிற்று. இங்குத் “தூங்குமஞ்சக்கால்கள்” என்னுந் தொடர்மொழியே ஒட்டியுடனாடுவாரையுணர்த்துங் குறிப்புமொழியாகிய பழமொழியாயிற்று.

148\. முன்னலிந் தாற்ற முரண்கொண் டெழுந்தோரைப்
பின்னலிது மென்றிருத்தல் பேதைமையே—பின்சென்று
காம்பன்ன தோளி கடிதிற் கடித்தோடும்
பாம்பின்பற் கொள்வாரோ வில்.

எ-து, மிக முரண்கொண்டெழுந்து முந்துறத் தம்மைநலிந்தாரையொருதே தாம் பின்புநலிவேமென்றுகருதியிருத்த லறிவின்மையேயாம்; மூங்கிலன்னதோளினையுடையாய்! கடித்தோடும்பாம்பினைப் பின்றொடிச்சென்று பல்லினைப்பறித்துக்கொள்வா ரில்லையாதலா லென்றவாறு.

(குறிப்பு) இது, தன்னை யொறுக்கவருவாரை முன்னேயொறுக்க வென்கிறது. ஆற்றமுரண்கொண்டெழுந்து முன்னலிந்தாரையென விகுதிபிரித்துக் கூட்டுக. நலிந்தாரென விரைந்தபொருளி லிறந்தகாலம் வந்தது: நலியவருவாரை யென்பது கருத்தாகக்கொள்க. ஒருதே என்றது அவரொறுத்தற்குமுன்பே அவரையொறுத்து நலியச்செய்யாமல் என்றவாறு. இருத்தல் பேதமை எனக் காரியம் காரணமா யுபசரிக்கப் பட்டது. பின்சென்று கோள்வார் எனக் கூட்டுக. "கடிதிற் கடித்தோடும்—பாம்பின்பற் கோள்வாரோவில்" என்பது பழமொழிக்கூற்று. இது குறிப்பால் நலியவரும்பகையை முற்பட வோறுக்கவேண்டுமென்னும் விதிப் பொருளைமுடித்தற்குத் திட்டாந்தமாயிற்று. பின்னுடிச்சென்று என்றது பின்பொருகாலாந்தரத்திற்சென்று என்றவாறு. பல்லினைப்பறித்துக் கோள்வார் என்றது பல்லினை வலிந்துபறிப்பார் என்றபடி. "கடித்துப் போனபாம்பை யடித்துப்பயனேன்ன?" என்பது இதன் பழமொழி. அது கடிக்கவரும்போதே அடித்துவிடவேண்டுமென்பது இதன்கருத்து.

149. நெறியா லுணராது நீர்மையு மின்றிச்
சிறியா ரெளியாரா லென்று—பெரியாரைத்
தங்கணேர் வைத்துத் தகவல்ல கூறுதல்
திங்களை நாய்குரைத் தற்று.

எ-து, நெறிமையாலுணராதே தகுதியுமின்றிப் பெரியாரை யெளிய ரென்றகருதிச் சிறியார் தங்கட்குநேராகக்கொண் டப்பெரியார்க்குத் தகவல்லா தனகூறுதல் திங்களை நாய்குரைத்தாற்போலு மென்றவாறு.

(குறிப்பு) இது, பெரியாரைப்பழிப்பார் இகழப்படுவாரென்கிறது. நெறிமையாலுணர்தலாவது அறமே கண்ணாகவொழுகுமவாறு ஒழுக்க வகையாலுளதாய உயர்வையுணர்தல். தகுதி—இங்கு அவரது பழி யறிந் துரைத்தற்கேற்றதோ ரதிகாரமில்லை. பெரியார்—கல்வி, அறிவு, ஒழுக்கம், குடிப்பிறப்புமுதலிய வுயர்நலங்களான் மிக்கார். எளியரென்று கருதி என்றது தகவல்சொல்லுவார்க் கொருதீங்கிழைக்குமாற்றலுடைய ரல்லரெனநினைந்து என்னும் குறிப்புணர்நின்றது. சிறியார்—கல்வி, அறிவு, ஒழுக்கம், குடிப்பிறப்புக்களின்றிக் காமசாரவொழுக்கமே கண்ணாகவுடையவர். சிறியார்கூறுதல் எனக் கூட்டுக. நேர்வைத்தல்—நேரல்லாதவரை நேராக வலிந்துவைத்தல். அவர்க்குத் தகவல்லாதனகூறுதல்—அவர் பெருமைக் கேதுவாகிய கல்வி, அறிவு, ஒழுக்கம், குடிப்பிறப்பு



ஸ்ரீ

கடவுள் துணை.

# திருக்குற்றாலமாலை.



## காப்பு.

பூமண்டலம்பரவும்புங்கவர்குற்றாலலிங்கர்
நாமஞ்சேர்பாமாலைநாட்டவே—தாமஞ்சேர்
தந்தமதத்தந்திமுகத்தந்தைதுணைச்செந்தினகர்க்
கந்தனிணைச்செஞ்சரணங்காப்பு.

## நூல்.

மொழிகொண்டமூவர்திருப்பாடல்கற்றுமுழுதுமுன்பால்
வழிகொண்டபேரன்புவைப்பதென்றேகுழல்வாய்மொழிப்பெண்
விழிகொண்டகாட்சிக்கெளியாய்பெண்பூமிபொன்வேட்கையெல்லா
மொழிகொண்டதொண்டர்க்குரியாய்குற்றாலத்துறைபவனே. (1)

எனக்கேறநின்வழிநில்லாமல்யானெனதென்னும்வழி
தனக்கேறியைவர்தடையிற்பட்டேன்றடைதீர்ப்பதற்கோ
கனக்கேளுனையன்றிக்காணேன்முழுதுமுன்கையிற்பிள்ளை
யுனக்கேயடைக்கலங்கண்டாய்குற்றாலத்துறைபவனே. (2)

பொன்னைப்பரமென்றுமின்னார்கலவிப்புலவியின்பந்
தன்னைப்பரமென்றுமேயிருந்தேன்யமதண்டம்வந்தாற்
பின்னைப்பரமொன்றுங்காணேனுனதருட்பேறருள்வா
யுன்னைப்பரமென்றுசார்ந்தேன்குற்றாலத்துறைபவனே. (3)

ஆக்கமுண்டாகமகிழ்ச்சியுண்டாகியுமல்லவென்று
லேக்கமுண்டாகியுமேயிளைத்தேனன்பரின்பக்கல்வித்
தேக்கமுண்டாகியுந்தேறேனெனைமுற்றுந்தேற்றுகண்டா
யூக்கமுந்தாக்கமுமில்லாய்குற்றாலத்துறைபவனே. (4)

அருமந்தநின்னருள்போற்றேன்பொசிப்புக்கமைத்தபடி
வருமென்றிருக்கவுமாட்டேன்பிறவிமயக்கமறக்
குருவென்றநீவந்துதோன்றாய்முன்மூவர்கள்கோட்டைகொன்ற
வொருமந்தகாசப்படையாய்குற்றாலத்துறைபவனே. (5)

பெற்றார்தம்பிள்ளைகளைவறியார்பிள்ளைநோவறிந்தாற்
சற்றாகிலும்பகிர்ந்தாற்றரியார்தந்தைதாயினுமென்
பற்றாப்பசிகண்டமுதூட்டிநோயறப்பார்க்கவல்ல
வுற்றாருனையன்றியுண்டோகுற்றாலத்துறைபவனே. (6)

மறையாடுந்தெய்வத்திரிகூடஞ்சார்ந்துவடவருவித்
துறையாடியுன்னைத்தொழுவதென்றோதடஞ்சோலையெல்லாஞ்
சிறையாறுகால்வண்டுபண்பாடமாந்தளிர்ச்செங்கரத்தா
லுறையாடுந்தேனமுதூட்டுங்குற்றாலத்துறைபவனே. (7)

கிள்ளைகள்போற்படித்தாவதிங்கேதன்கிருபையின்பால்
பிள்ளைகள்போலுன்னைப்பேறருள்வாய்கிளிப்பிள்ளையெல்லாம்
வள்ளைகள்பாடுஞ்சித்ராநதியாயன்புவைத்ததொண்ட
ருள்ளையெல்லாங்கொள்ளைகொண்டாய்குற்றாலத்துறைபவனே. (8)

ஆசையெலாம்பொருண்மேலாயொருவனகத்திவிரா
வேசையுமென்னெஞ்சமொக்குங்கண்டாய்விண்ணுளோர்புரியும்
பூசையம்போருகத்தாளாய்நிறைந்தசம்பூரணமா
மோசையும்விந்துவமாவாய்குற்றாலத்துறைபவனே. (9)

கருக்கொண்டபோதன்றுங்கன்மவியாதிகருவிலுருப்
பெருக்கும்பொழுதநெருக்கும்வியாதிபிறந்துபின்னை
யிருக்குஞ்சடமும்வியாதியென்றாவிதைநம்பிநன்றா
யுருக்குஞ்செனனமெடுத்தேன்குற்றாலத்துறைபவனே. (10)

கன்மமரும்பியவாவிங்கிலைம்புலன்கள்வைத்துப்
பன்மலஞ்சிக்கொண்டசென்மவியாதிபழுத்துவந்தாற்
றன்மவைத்தியன்சத்ரமிடாமற்றவிர்க்குமருந்
துன்மலர்த்தாளிணைதாராய்குற்றாலத்துறைபவனே. (11)

அமையம்பலவுமொருபொழுதாயசையாமலுன்றன்
சமயங்கருதத்தவமெய்துமோசண்பகாடவிரு
ழிமயம்பெறுமங்கைசுந்தரிகோமளையாமளையென்
னுமையம்பிகைமணவாளாகுற்றாலத்துறைபவனே, (12)

பூங்காரணிகுழலார்மயக்கான்மனம்புத்திசித்த
மாங்காரந்தட்டழிவேற்கிரங்காயன்புநீர்பெருகித்
தேங்காமத்தேங்குமனத்தார்பாவித்தியானஞ்செய்யு
மோங்காரவட்டத்தொளியேகுற்ருலத்துறைபவனே. (13)

முன்வடிவாய்முன்னிருந்திடலேதுமுளைக்கருவாப்
பின்வடிவார்க்கும்வினைவடிவேதுகைபேணிநின்ற
வென்வடிவேதுபின்யானெனன்பதேதென்னையாட்டிவைக்கு
முன்வடிவேதுகொல்சொல்லாய்குற்ருலத்துறைபவனே. (14)

நில்லாவுடம்பிலுயிர்நின்றதோவுயிர்நின்றிடத்தே
யெல்லாவுடம்புநிலைநின்றதோவியல்சேர்வடிவும்
பல்லாவுயிருமொன்ருேபுறம்போபகையோவுறவோ
வொல்லாமலோர்வழிசொல்லாய்குற்ருலத்துறைபவனே. (15)

வருநாளவர்கண்மனைசந்தைக்கூட்டம்வரவற்றநாட்
டிருநாட்கழிந்தமடமொக்குமேயிதைச்சிந்தித்துநான்
பருநாட்கழிப்பதுபாரையயான்பலநாளுமுன்னை
யொருநாளிற்காண்பதுரையாய்குற்ருலத்துறைபவனே. (16)

வாசக்குழந்தையுமாய்மடவார்மணவாளனுமாய்
ஆசைப்பருவமதுதப்பினலந்தமாதருங்கண்
கூசக்கிழங்கொண்டுதோலாகிநாற்றங்குலைக்குமிந்த
ஆசச்சடமென்றுபோமோகுற்ருலத்துறைபவனே. (17)

திருத்தப்புகுந்திடிலண்டங்கள்கோடிதிருத்துவையென்
கருத்தைத்திருத்தவுனக்கரிதோகௌவைகாட்டுங்கன்ம
வருத்தத்தைமாற்றவோர்மாற்றங்கொடாய்குழல்வாய்மொழியா
ளொருத்திக்கொர்பாகங்கொடுத்தாய்குற்ருலத்துறைபவனே. (18)

காணுறக்கண்டுனைப்போற்றறியார்கடையாம்பொசிப்பும்
வீணுறக்கங்களுமேகுறிப்பாரருள்வெள்ளத்தின்பால்
சேணுறக்கண்டுசிவயோகநித்திரைசெய்யுமன்ப
ருணுறக்கங்குறிப்பாரோகுற்ருலத்துறைபவனே. (19)

நிறையும்பிரணவமூடாச்சதுர்மறைநீண்டகொப்பா
வறைகின்றசாகைகிளையாவறமுதனுன்கரும்பிக்
குறைவின்றிஞானமணநாறுந்தெய்வக்குறும்பலவி
லுறைகின்றமுக்கட்கனியேகுற்ருலத்துறைபவனே. (20)

எல்லாவடிவுமொன்றனுமங்கவ்விருந்துநல்லார்
பொல்லாரெனவிளையாட்டியதாலதுபோன்மனத்திற்
கல்லாமைகற்பிக்குமென்பாசநேசங்கருதிலன்ப
ருல்லாசநேசமொப்பாமோகுற்றாலத்துறைபவனே. (21)

அருவித்துறைபடிந்தாடிவெண்ணீறிட்டுனன்பர்தம்பால்
மருவிப்பணிலமறுகூடுவந்துன்னைவாழ்த்தும்வண்ணங்
கருவிப்பவமறுகூடுசெல்லாக்கதிகாட்டுகண்டா
யுருவிற்குவமையொன்றில்லாய்குற்றாலத்துறைபவனே. (22)

விருத்தரையும்வெல்லுமெல்லியர்நேசம்விடுத்துநின்பா
விருத்தரைமாத்திரைக்கேயைவரோடலையேத்துமுண்மைக்
கருத்தரைக்கண்டுகருதாமற்சிந்தைகபாடஞ்செய்தா
லொருத்தரைநோவதழகோகுற்றாலத்துறைபவனே. (23)

நாலுளெனதுடம்பேதுணர்வேதெனைநாட்டினைநீ
யாலுளெனத்தெளியேனெளியேன்செண்பகாடவிசூழ்
காணூர்சிவமதுகங்கையின்மூழ்கக்கருணைசெய்தே
பூணூர்பிறவியொழிப்பாய்குற்றாலத்துறைபவனே. (24)

வேம்பேபுழுவுக்கதிரசமாய்வெவ்விடங்கிடந்த
பாம்பேகலுழனுக்காரமுதாய்ப்பற்பலவுயிர்க்கு
மாம்பேதபேதமட்டேட்டியதால்வினையாம்பொசிப்பை
யோம்பேனருளமுதூட்டாய்குற்றாலத்துறைபவனே. (25)

குன்றாதஞானக்கனியையஞ்ஞானக்கொடும்பசிக்குத்
தின்றேகவென்னிலுமைவரோட்டார்நிலைத்தேங்கிமனங்
கன்றுமலுன்னருளூடாடியுள்ளனுங்கள்ளனும்போ
லொன்றுநாளினியென்றோகுற்றாலத்துறைபவனே. (26)

பொன்னென்றுசொன்னவுடனேமயங்குமென்புத்தியைநா
னென்னென்றுசொல்லித்திருத்திக்கொள்வேனெனையின்றசெஞ்சொற்
பன்னென்றுசொன்னபடிபோலவுள்ளபடியைநெஞ்சி
லுன்னென்றுபோதித்தருள்வாய்குற்றாலத்துறைபவனே. (27)

காறுங்குரம்பைக்குள்ளேமருண்டேனுனைநாடிமனந்
தேறும்படிக்கொருதேற்றஞ்சொல்வாயன்புதேக்கியுள்ளே
யாறுங்கருத்தினர்சித்தாம்புயத்திலருட்பெருக்கா
யூறுஞ்சிவானந்தத்தேனேகுற்றாலத்துறைபவனே. (28)

ஆற்றிற்குமிழியின்றோற்றங்கள்போலண்டகோடியெல்லாந்
தோற்றிக்கணப்பொழுதேமறைப்பாய்துறைப்பாவிலுன்சீர்
சாற்றித்துதிப்பவர்முன்வருவாய்சண்டனென்னுயிரை
யூற்றிக்குடிக்குமுன்வாராய்குற்றாலத்துறைபவனே. (29)

இடம்போதவுண்ணக்கிடைத்தானடக்குஞ்சிலகுறைந்தான்
முடம்போற்கிடக்குமிகுந்தாலும்வாதிக்குமுன்கொடுத்த
கடன்போலனுதினங்கைக்கூலிவாங்குங்களிசவிந்த
வுடம்போடிருப்பதெளிதோகுற்றாலத்துறைபவனே. (30)

மழைமுகந்தேடும்பயிர்முகம்போலநின்வாய்த்தசங்கக்
குழைமுகந்தேடுமென்சிந்தைகண்டாய்கொன்றைவேணிவில்லத்
தழைமுகந்தாடமறைபாடச்சித்ரசபையினின்றே
யுழைமுகந்தாங்கரத்தாய்குற்றாலத்துறைபவனே. (31)

வெண்மைப்பொருளின்விகாரங்களீங்கிவிகாரமில்லாத்
திண்மைப்பொருளென்றுசேருங்கொல்லோசிந்தைசெய்யுமன்பர்
வண்மைப்பெரும்பெருக்கேயொருக்காலுமவுனம்விடா
ருண்மைச்சிவாநந்தவாழ்வேகுற்றாலத்துறைபவனே. (32)

சற்பனையாஞ்சகவாழ்க்கையெல்லாங்கண்டுகண்விழிக்குஞ்
சொற்பனமாமென்றுதூஷணியேனியான்றூஷணிக்க
நிற்பனவேண்டுநெறியிலியேனைநீபுரப்பா
யுற்பனஞானப்பொருளேகுற்றாலத்துறைபவனே. (33)

அருவமென்றோருக்கருவமுற்றாய்தம்மறிவுமட்டுஞ்
சொருவமென்றோர்க்குச்சொருபமுற்றாய்தொல்லைமூவுலகுஞ்
செருவில்வெல்வாய்படைப்பாயளிப்பாயுன்றிருவிளையாட்
டொருவிளையாட்டல்லகண்டாய்குற்றாலத்துறைபவனே. (34)

வென்றறியாச்சமர்வெல்பவராகிலும்வெவ்வினையைச்
சென்றறிவால்வெல்லவல்லருண்டோநின்செயல்பிரிந்தால்
நன்றறிவாருமிரப்பாருனதருணாட்டம்பெற்றா
லொன்றறியாருலகாள்வார்குற்றாலத்துறைபவனே. (35)

பூதாதிபல்லுயிர்க்குந்தலையானநின்பொற்சிலம்பின்
பாதாம்புயஞ்சென்னிசேர்த்தருள்வாய்பெரும்பார்படைக்கும்
வேதாவின்மேல்விதியேவித்தில்லாமல்விளைபொருளே
யோதாதுணருமுணர்வேகுற்றாலத்துறைபவனே. (36)

படையாதசென்மமுமென்படைத்தாய்பஞ்சபூதவெறி
விடையாதிவில்விடவோவிடவோமெத்தவேமெலிந்து
கடையாயினேனிரங்காயொருபாகங்கவுரிகொண்டா
யுடையாய்கரந்தைச்சடையாய்குற்றாலத்துறைபவனே. (37)

அடுக்குறுந்துன்பமுமின்பமுமாயவலையடித்து
நடுக்குறுஞ்சென்மக்கடல்புகுந்தேநலியாமலென்னை
யெடுக்குறுநின்னருட்பேரின்பத்தோணியிலேற்றுகண்டா
யொடுக்கமுந்தோற்றமுமில்லாய்குற்றாலத்துறைபவனே. (38)

இருகாதுகேட்கில்வருமாசையற்பமிருகண்கண்டாற்
பெருகாசைகொண்டுபிதற்றியதாற்பெரும்பேதமையாற்
கருகாதவண்ணங்கருகிநொந்தேன்கருத்தாறியுன்பா
லுருகாதநெஞ்சனையாள்வாய்குற்றாலத்துறைபவனே. (39)

பொன்மேருவத்தனைபொன்குவித்தாலுமென்புத்தியின்ன
மென்மேலுந்தேடநினைக்குங்கண்டாய்வினைபோக்கறவே
யென்மேற்றயாவினுமென்மடங்காவெந்தக்காலமுநா
ளுன்மேன்மனம்வைப்பதென்றோகுற்றாலத்துறைபவனே. (40)

பன்னாளுங்காமம்பொறுத்திருந்தாலும்பசியொருநா
ளொன்றாற்பொறுக்கப்படாதுகண்டாயிதையார்க்குரைப்பேன்
சொன்னாற்பகுத்தறிவார்க்கண்டிலேன்சுற்றிப்பார்க்கிலெங்கு
முன்னாற்பதமன்றிக்காணேன்குற்றாலத்துறைபவனே. (41)

விரகப்படாமணிக்கொங்கையர்காமத்தில்வீழ்ந்துபொல்லா
நரகப்படாமலெனைப்புரப்பாயுண்மைஞானமொன்றித்
திரகப்படாமனத்தார்க்குரியாய்மதிக்கீற்றணிந்த
உரகச்சடாடவியானேகுற்றாலத்துறைபவனே. (42)

வேறுபடாமலுலகாண்டமன்னரும்வெந்துடல
நீறுபடாரில்லைநீணிலத்தேநெடும்பாசவினைத்
தூறுபடாவழிபார்த்தியென்றேன்சொலச்சொல்லமன
மூறுபடாதென்னசெய்வேன்குற்றாலத்துறைபவனே. (43)

மறுக்கிச்சுறுக்கென்றெமதூதர்வந்துகைவாளெடுத்துக்
குறுக்கித்தறுக்குமுன்னேவருவாய்மந்திகுந்திவெள்வான்
முறுக்கிச்சுறுக்கிக்குதித்துப்பலாப்பழமொக்கிவிக்கி
யுறுக்கித்தறுக்கிடிக்குங்குற்றாலத்துறைபவனே. (44)

வெறுமந்திமுன்னிருட்போல்வருங்காலன்வெகுண்டுயிரைத்
தெறுமந்த்யகாலத்தின்முன்வருவாய்கனிதின்றுதட்டி
மறுமந்திமேற்செலத்தேன்பாயுங்கொம்புவழுகிவிழுந்
துறுமந்திகுந்திநடிக்குங்குற்றாலத்துறைபவனே. (45)

அவப்பாடல்பாடியலைவதுதீரவனுதினமும்
சிவப்பாடல்பாடித்தெளிவதென்றோதெய்வப்பாடன்மறைத்
தவப்பாடல்காட்டுநற்றாருடையாய்கொன்றைத்தாருடையாய்
யுவப்பாடன்மாமன்றுடையாய்குற்றாலத்துறைபவனே. (46)

வருபான்மதிவைத்தசெஞ்சடைக்காடும்வழுத்தமுத்தி
தருபாதமுமென்றுசந்திப்பனேமலைச்சாரலெலா
மிருபாலுமுத்துங்கனகமும்வாரியிறைத்துநித்த
மொருபாலருவிகுதிபாய்குற்றாலத்துறைபவனே. (47)

செண்பகக்காவுந்திரிகூடமுஞ்சித்ரமாநதியுங்
கண்படைத்தார்பிரிந்தாற்றுவரோகன்மியாப்பிறந்த
புண்படைத்தேனுக்கிரங்காயிரவிற்பொன்மேடையெல்லா
மொண்பகற்போலொளிவீசுங்குற்றாலத்துறைபவனே. (48)

நீட்டிநினைப்பதைவேறுசெய்வாய்நினையாததெல்லாங்
காட்டிவைத்தங்ஙனமேமறைப்பாயெனைக்காத்தருள்வா
யாட்டியசைக்கின்றசூத்திரத்தாலனைத்தாருயிர்க்கு
மூட்டியுறக்கந்தருவாய்குற்றாலத்துறைபவனே. (49)

மறவேன்மயக்கென்றுநெஞ்சில்விகாரத்தைவஞ்சமறத்
துறவேன்வெருட்டித்தொடருமில்வாழ்க்கையைச்சுற்றிச்சுற்றி
யறவேதளர்ந்துவிட்டேனிரங்காயென்றுமாசையற்றா
ருறவேமெய்ஞ்ஞானநறவேகுற்றாலத்துறைபவனே. (50)

பேசியவாய்மையெல்லாமுனைப்பேசியுன்பேருளாம்
வாசியைமேற்கொண்டுவாழ்வதல்லாற்கவிவாணரென்றாற்
கூசியமூடரைப்பாடித்திண்டாடிக்கொடுங்கலியா
மூசியின்மேனிற்கப்போமோகுற்றாலத்துறைபவனே. (51)

கள்ளார்ந்தபூமணம்போலிருப்பாயுன்கருணையின்பத்
தெள்ளாரமுதுண்டுதேக்கியிராமற்றிகைத்துநித்தம்
வெள்ளாவினாற்றமுடைநாறுங்காயவிடக்குக்குநா
னுள்ளாசைவைத்ததுநன்றோகுற்றாலத்துறைபவனே. (52)

குறைந்தார்க்குறைந்தநிறைந்தானிறைந்தெவர்கோலத்தன்று
மறைந்தாயுன்கோலத்தையாரறிவாரென்னைவாழ்விகண்டாய்
அறைந்தாடருவிமலைச்சாரல்சூழ்செண்பகாடவியி
லுறைந்தாயுலகநிறைந்தாய்குற்றாலத்துறைபவனே. (53)

ஆகாரமித்திரையேகாரணமென்றறமயங்கி
மாகாமிநான்கொண்டமாலொழிப்பாய்கங்கைமங்கையின்ப
மோகாகுழன்மொழிபாகாமெய்ஞ்ஞானத்தின்மோனம்விடா
யோகாவசந்தவைபோகாகுற்றாலத்துறைபவனே. (54)

வண்டாடும்பூங்குழல்கண்டாகும்பான்மொழிமாதர்மயல்
கொண்டாடிவித்தமுந்திண்டாடினேன்கொடுங்கூற்றுதைத்த
தண்டாமுனியுய்யக்கொண்டாயமரரைத்தாங்கவிட
முண்டாயடைக்கலங்கண்டாய்குற்றாலத்துறைபவனே. (55)

சாலக்கொடும்பசிதாக்கநொந்தேன்வினைதாக்குகலி
காலத்தைவெல்லக்கருணைசெய்யாய்தனிக்காலங்கண்டு
வாலக்கிளிமொழியாரிசைவாதக்குமாறனைப்போ
லோலக்கருங்குயில்கூவுங்குற்றாலத்துறைபவனே. (56)

கையார்தொழிலுக்கெல்லாந்தொல்லைப்பாரங்கருத்திலஞ்சிச்
செய்யாதிருக்கிற்கடும்பசிபோரஞ்செய்துண்ணவென்றுற்
பொய்யாமுடம்பிற்பிணிபாரநின்றபுலம்புகின்றே
னுய்யாமைதீர்த்தருளையாகுற்றாலத்துறைபவனே. (57)

இம்பரைக்காமித்தவந்தநின்னன்பரையேத்தலன்றி
வம்பரைப்போய்வணங்காதருள்வாய்வண்டுகிண்டுமலர்க்
கொம்பரைக்காதமணக்குந்திரிகூடக்குவட்டினின்றே
யும்பரைக்கானவர்கூவுங்குற்றாலத்துறைபவனே. (58)

வெறுத்திடேனீவினைசெய்தாலுந்தொண்டனைவேண்டியென்றும்
பொறுத்தினியாளக்கடனுனக்கேமழைபோலிருள்போற்
கறுத்திடுங்கோதையர்பூந்தாளின்மாணிக்கக்கற்படிக
முறுத்திடுங்கோலமலைசூழ்குற்றாலத்துறைபவனே. (59)

கொடுக்கச்சடைவற்றவன்னையும்பாடிக்குலாமர்முன்போ
யிடுக்கட்படவேதமழகல்லவேவ்வையீடழிக்கு
நடுக்கத்தையாற்றப்படாதகண்டாயெந்நாளுமுன்னை
வடிக்கக்குறைவருத்தாதேகுற்றாலத்துறைபவனே. (60)

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1921 ௵ பிப்ரவரி ௴ த்து வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு | | | | | | விவரம் | செலவு | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1921 February | | | 1920 February | | | | 1921 February | | | 1920 February | | |
| I GENERAL SECTION: | | | | | | | I GENERAL SECTION: (1) ESTABLISHMENT:— | | | | | | |
| (1) சங்கம் உப அக்கிராசனாதிபதியும், ஆண்டிபட்டி ஜமீந்தாருமான மகா-ள-ள-ஸ்ரீ S.Rm.M.Ct. பெத்தாச்சிசெட்டியாரவர்களிடமிருந்து சங்கக்கட்டிட பண்டுக்காக வாக்களித்த தொகை வரவு 5000 | | | | | | | (a) மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் | 129 | 8 | 9 | | | |
| | | | | | | | (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 107 | ... | ... | | | |
| | | | | | | | (c) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 20 | ... | ... | | | |
| ஷெயார்மூலம் வட்டிக்குப் போடப்பட்டிருந்த சங்கக்கட்டிட பண்டுத்தொகை வட்டியுள்பட வரவு 9079-6-2 | | | | | | | (2) Stationery, contingencies வாங்கியவகையில் செல் ... | 24 | 14 | 4 | | | |
| | | | | | | | (3) பாண்டியன் புத்தகசாலைக்குப் புத்தகம் வாங்கியவகையிலும், 'Hindu' பத்திரிகைக்குச் சந்தா செலுத்தியவகையிலும் செலவு ... | 6 | 4 | ... | | | |
| ஷெயாரிடமிருந்து, 1920, 1921-ம் வருடத்துக்கு வரவேண்டிய மாதச்சந்தாத்தொகை வரவு ரூ 1200-0-0 | | | | | | | (4) சங்கக்கட்டடத்தைச் சங்கத்திற்காகக் கிரயத்துக்கு வாங்கியவகையில், மாட்சிமைதங்கிய கனம் அக்கிராசனாதிபதியவர்கள், தம் | | | | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| புதுக்கோட்டை மன்னர் முதலிய இடங்களிலிருந்து வரத் தக்கபடி [illegible] தொகை வரவு 100 0 0 | | | | | | |
| ஆக ரூ 15,379-6 2 | 15,379 | 6 | 2 | | | |
| (2) சங்கப்பரீக்ஷைக் கட்டணத் தொகை வரவு ... | 21 | 14 | .. | | | |
| (3) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 13 | 5 | 9 | | | |
| மொத்தம் ரூ ... | 15,417 | 9 | 11 | 272 | 7 | 9 |
| II Editorial Section: | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தா வரவு ... | 238 | 14 | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக்குச் சந்தா வரவு ... | 214 | 4 | ... | | | |
| (3) விளம்பரக்கூலி வரவு ... | 3 | ... | .. | | | |
| (4) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு | 5 | 1 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 461 | 3 | ... | 17 | 11 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ...ராந்தத்தினின்றும் மேயத்தொகை செலுத்தியதில் ஷெயாருக்குச் சங்கத்தினின்றும் செல்லாக்கியது போக மீதம் செல்லாகவேண்டியிருந்ததைச் செல்லாக்கியது ரூ 9858-5-4 மேற்படி தொகைக்கு வட்டி வகையில் செல்லாக்கியது ரூ 1641-10-8 | | | | | | |
| ஆக ரூ 11,500-0 0 | 11,500 | ... | ... | | | |
| (5) சங்கக்கட்டடவகையரா றிப்பேர் சம்பந்தமாகச் செலவு ... | 26 | 13 | 9 | | | |
| (6) தபால், தந்திவகையில் செல் | 25 | 13 | ... | | | |
| (7) முனிசிபாலிடிக்கு வரி செல்லாக்கியது ... | 56 | 8 | .. | | | |
| (8) சங்கப்பதிப்புப் புத்தகப்பிரசுரசம்பந்தமாகக் காகிதம்வாங்கிய வகையில் செலவு ... | 306 | 15 | . | | | |
| (9) சங்கச்சில்லரை வேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிக்கூலிவகையில் செலவு ... | 13 | 1 | ... | | | |
| (10) சங்கப்பரீக்ஷை விஷயமாகச் செலவு ... | 80 | 3 | ... | | | |
| (11) சங்கத்தின் அக்கிராசனாதிபதியவர்களிடமிருந்து சங்கத்துக்குக் கடனாக வரவுவந்திருந்த தொகையை ஷெயாருக்குச் செல்லாக்கியது ரூ 1800-0 0 | | | | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்ஸில்நடந்த வேலைகளுக்கு அச்சுக் கூலி வரவு ... | 224 | 6 | ... | | | |
| (2) ஷை வேலைகட்காகக் காகிதக் கிரயம் வரவு ... | 29 | 6 | ... | | | |
| (3) Miscellaneous வரவு ... | ... | 10 | ... | | | |
| (b) Binding | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீஸில் நடந்த வேலைகளுக்கு, பைண்டிக் கூலி வரவு ... | 38 | 9 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 292 | 15 | ... | 266 | 9 | .. |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சங்கத்தின் உப-அக்கிராசனாதிபதியவர்களிடமிருந்து சங்கத்துக்குக் கடனாக வரவுவந்திருந்த தொகையை ஷை யாருக்குச் செல்லாக்கியது ரூ 1200 0-0 | | | | | | |
| ஆக ரூ 3000-0-0 | 3000 | ... | ... | | | |
| (12) Miscellaneous செலவு ... | ... | 12 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 15,297 | 12 | 10 | 586 | 15 | 8 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | | | |
| (2) செந்தமிழ்ப் பத்திரிகை சம்பந்தமாக வாங்கிய காகிதம் அச்சுக் கூலிவகையில் செலவு ... | 91 | 13 | ... | | | |
| (3) தபால், தந்திவகையில் செல் | 32 | 4 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 159 | 1 | ... | 24 | 14 | 6 |
| III PRESS SECTION: | | | | | | |
| (a Printing. (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 125 | 7 | 11 | | | |
| (2) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 47 | 3 | 9 | | | |
| (3) Miscellaneous செலவு ... | 20 | 7 | ... | | | |
| (b) Binding. (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 27 | 15 | 6 | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 16,171 | 11 | 11 | 556 | 11 | 9 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத் தொகை ரூ. ... | 1410 | 12 | 9 | 1781 | 12 | .. |
| ஆகமொத்தம் ரூ. ... | 17,582 | 8 | 8 | 2338 | 7 | 9 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) Contingencies வாக்கிய வகையில் செலவு .. | 16 | ... | 6 | | | |
| மொத்தம் ரூ | 237 | 2 | 8 | 119 | 10 | ... |
| ஆக மொத்தம் செலவு ரூ. | 15,694 | | 6 | 781 | 8 | 2 |
| மாத முடிவில் மீதியிருப்புத் தொகை ... | *1888 | 8 | 2 | 1606 | 15 | 7 |
| ஆகமொத்தம் ரூ. ... | 17,582 | 8 | 8 | 2338 | 7 | 9 |

*By C. Pass Book 556-0-0
Advance for purchase of Press Materials at Madras 1112-11—0
Cash on hand 219-13-2

*Audited and found correct.*

**V. S. RAMASWAMI,**

AUDITOR.

15—3—21.

**LAKSHMINARAYANAN,**

*Ag. Manager.*

MADURA TAMIL SANGAM.

2—3—21.

## மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1921-ஸு மார்ச்சுமீ த்து வரவு செலவு கணக்கு.

**வரவு**

| விவரம். | 1921 March | | | 1920 March | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION:— | | | | | | |
| (1) Donations Contributions வகையில் வரவு ... | 110 | ... | ... | | | |
| (2) M. R. C. C. Bank-ல் போட்டுள்ள தொகையின் பேரில் வட்டி வரவு. ... | 844 | 6 | 6 | | | |
| (3) சங்கப் பரீக்ஷைக் கட்டணத்தொகை வரவு ... | 1 | ... | ... | | | |
| (4) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு. | 37 | 13 | ... | | | |
| (5) (a) Bankல் போட்டுள்ள தொகை withdraw செய்தது 1050-0-0 | | | | | | |

**செலவு**

| விவரம் | 1921 March | | | 1920 March | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) ESTABLISHMENT:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டு ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 86 | ... | .. | | | |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 107 | ... | ... | | | |
| (c) மாணவர்கட்குப் போஷணைக்காகச் செல் ... | 45 | 1 | ... | | | |
| (d) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 27 | 4 | 2 | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையிற்செல் ... | 8 | 8 | ... | | | |
| (3) புத்தகசாலைக்குவரும் பத்திரிகைக்குச் சந்தா செல் ... | 2 | 12 | ... | | | |
| (4) Furniture வாங்கிய வகையில் செல் ... | 14 | ... | ... | | | |
| (5) சங்கக்கட்டட வகையரா ரிப்பேர்சம்பந்தமாகச் செலவு ... | 111 | 13 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (b) Miscellaneous வரவு 1-4-9 | | | | | | |
| ஆக ரூ. 1051-4-9 | 1051 | 4 | 9 | | | |
| மொத்தம் ... | 2044 | 8 | 3 | 236 | 4 | 6 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தாவரவு | 51 | 8 | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகைக்குச் சந்தாவரவு ... | 156 | 14 | ... | | | |
| (3) விளம்பரக்கூலி வரவு ... | 3 | ... | ... | | | |
| (4) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு ... | 27 | 2 | ... | | | |
| மொத்தம் ... | 238 | 8 | ... | 581 | 10 | ... |
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்ஸில் நடந்த வேலைகளுக்கு அச்சுக்கூலி வரவு ... | 215 | 3 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (6) தபால், தந்திவகையிற் செலவு ... | 9 | 12 | 6 | | | |
| (7) புத்தகப்பிரசுரசம்பந்தமாகக் காகிதக்கிரயம் அச்சுக்கூலிவகையிற் செலவு ... | 111 | 4 | ... | | | |
| (8) சங்கச்சில்லரைவேலைகள்சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டிக்கூலிவகையிற் செலவு ... | 50 | 4 | ... | | | |
| (9) சங்கப்பரீக்ஷைகள் சம்பந்தமாகச் செலவு ... | 65 | 12 | ... | | | |
| (10) (a) Bankல் withdraw செய்த தொகையை மறுபடியும் deposit செய்தது 1050-0-0 | | | | | | |
| (b) Miscellaneous செலவு 1-6-0 | | | | | | |
| ஆக ரூ. 1051-6-0 | 1051 | 6 | ... | | | |
| மொத்தம் ... | 1690 | 12 | 8 | 552 | 4 | 4 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகைசம்பந்தமாக வாங்கிய காகிதம் அச்சுக்கூலி வகையிற் செல் ... | 43 | 9 | 6 | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) ஷை வேலைகட்காகக் காகிதக்கிரயம் வரவு ... | 14 | 4 | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீசில் நடந்த வேலைகளுக்கு பைண்டிக்கூலி வரவு ... | 56 | 8 | ... | | | |
| மொத்தம் ... | 285 | 15 | .. | 235 | ... | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) தபால், தந்திவகையிற்செல் | 17 | 13 | 3 | | | |
| மொத்தம் ... | 96 | 6 | 9 | 57 | 3 | 6 |
| III Press Section: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 196 | 2 | 1 | | | |
| (2) அச்சாபீஸிற்கு டைப்ஸ் வகையரா வாங்கியவகையில் செல் | 692 | 14 | ... | | | |
| (3) Furniture வாங்கிய வகையிற் செல் ... | 102 | 6 | ... | | | |
| (4) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 39 | 14 | 7 | | | |
| (5) அச்சாபீஸ் சீர்திருத்தசம்பந்தமாகச் செலவு ... | 288 | 9 | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 21 | 13 | 2 | | | |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | (2) Contingencies வரக்கிய வகையிற் செலவு ... | 45 | 12 | 10 | | | |
| | | | | | | | மொத்தம் ... | 1387 | 7 | 8 | 1 | 7 | ... |
| | | | | | | | ஆக மொத்தம் செலவு ரூ ... | 3174 | 11 | 1 | 610 | 14 | 10 |
| | | | | | | | மாதமுடிவில் மீதி இருப்புத் தொகை ... | *1282 | 12 | 4 | 2028 | 15 | 3 |
| | | | | | | | ஆகமொத்தம் ரூ. ... | 4457 | 7 | 5 | 2639 | 14 | 1 |
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 2568 | 15 | 3 | 1032 | 14 | 6 | | | | | | | |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ... | 1888 | 8 | 2 | 1606 | 15 | 7 | | | | | | | |
| ஆகமொத்தம் ரூ ... | 4457 | 7 | 5 | 2639 | 14 | 1 | | | | | | | |

| | |
|---|---|
| *By C Pass Book | 850—0 0 |
| Advance for purchase of Press Materials at Madras | 104-3—8 |
| Cash on hand | 328—8—8 |

*Audited and found correct,*

**V. S. RAMASWAMI,**

AUDITOR,

5—6—21.

**LAKSHMINARAYANAN,**

*Ag. Manager,*

MADURA TAMIL SANGAM.

2—4—21.